St. Joseph's Industrial School Press.

1919.

V. P. Thaivanagan pillai

புலவர் வரலாறு—௧.

# நக்கீரர்

இஃது

திருச்சிராப்பள்ளி எஸ். பீ. ஜி. காலேஜ்
தலைமைத் தமிழாசிரியராகிய
நடுக்காவேரி
மு. வேங்கடசாமி நாட்டார்
எழுதியது.



கரந்தைத் தமிழ்ச்சங்கத்தாரால்
வெளிப்படுத்தப்பெற்றது.

TRICHINOPOLY :
St. Joseph's Industrial School Press.

—

பதிவு செய்தது.

1919.



## பதிப்புரை.

மேனாட்டு ஆங்கிலப் புலவர்களின் வரலாறுகளைப் பல ஆராய்ச்சி வல்லுநர்களைக்கொண்டு எழுதுவித்து லார்டு மார்லி துரைமகனார் வெளியிட்டுள்ளனர். அங்ஙனமே, தமிழ்ப் பெரும் புலவர்களின் வரலாறுகளை, அவர்களுடைய நூலாராய்ச்சிகளுடன், அறிவிற் பெரியவர்க

ளைக்கொண் டெழுதுவித்து, வெளிப்படுத்த வேண்டு மென்பது நம் தமிழ்ச் சங்க நோக்கங்களிலொன்று.

இதனைத் தொடங்குதற்குச் சில ஆண்டுகளின் முன் னரேயே ஏற்பாடு செய்யப்பட்டது. எனினும், ஆங்கி லப் புலவர் வரலாறுகளைப்போலத் தமிழ்ப் புலவர் வர லாறுகளை எளிதிற் றுணிதற்குப் போதிய துணைக் கரு விகளின்மையானும், பிறவற்றானும் அதனை நிறைவேற்று வதில் காலந் தாழ்க்க நேர்ந்தது.

வழிவழிப் போந்த கட்டுரைகளோடு கூடிய விவரங் களிலிருந்து உண்மைப் பொருள்களைப் பிரித்துக் காண் டல் எளிதானதாயில்லை. எனினும், கிடைக்கும் துணைக் கருவிகளைக்கொண்டு துருவி, ஆராய்ச்சியிற் பெறப்படும் பொருள்களை வெளியிட வேண்டுமென்பதே நம் கருத் தாகும்.

இக் கருத்துக் கியையவே, எம் வேண்டுகோளின் படி, பண்டிதர் திரு. மு. வேங்கடசாமி நாட்டார் அவர் கள், கடைச்சங்கத்து முதன் மை யுற்றிருந்த

நக்கீரர் என்னும் நல்லிசைப் புலவரின் வரலாற்றை வரைந்து தந்துள்ளார்கள். இதுவே புலவர் வரலாறு வரிசையில் முதலதாக வெளியிடப்படுகிறது.

## பதிப்புரை

இதிலிருந்தே, மேற்கூறிய இடர்ப்பாடுகளின் வலியும், ஆக்கியோரது நுண்ணறிவின் திறலும், அறியலாகும்.

இவ் வருமையான ஆராய்ச்சி யுரையை உதவிய திரு. நாட்டார் அவர்களுக்கும், இதனைப் பதிப்பிக்க உதவிபுரிந்த அன்பர்களுக்கும் இச்சங்கம் நன்றி யுணரும் கடப்பாடுடையதாகின்றது.

இதுபோன்றே, திரு. நாட்டார் அவர்கள் ஆராய்ச்சி செய்துவரும் பிற புலவர்களின் வரலாறுகளையும் விரைவில் வெளியிட நினைக்கின்றேம். இத்தகைய ஆராய்ச்சி யுரைகளை எழுதித் தருமாறு ஏனைப் புலவர்களையும் வேண்டுகின்றேம்.

கரந்தைத்
தமிழ்ச் சங்கம்
சித்தார்த்தி-ஞூ
சித்திரை-மீ க-ட.

த. வே. உமாமகேசுவரன்,
பி.ஏ., பி. எல்.,
சங்கத்தலைவர்.

# முகவுரை.

ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
யேங்கொலிநீர் ஞாலத் திருளகற்று—மாங்கவற்றுண்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்.

அமிழ்தினு மினிய நம்தமிழ் மொழியினை முச்சங்க நாளினும், பிற்றை நாளினும் ஆராய்ந்து, நல்லறிவின் முற்றுப் பேறுடையராய் விளங்கிய புலவர் பல்லாயிரவராவர். அன்னவரியற்றிய நூல்களும், பாட்டுக்களும் துறைதொறும் எண்ணிலவாகும். அவற்றுட் பல காலவயத்தானே மறைந் தொழிந்தமையின், அவற்றை யியற்றிய புலவர் பெயருள்ளும் பல மறைவனவாயின. எனினும், சிற்சில ஆண்டுகளாகச் சில பெரியோர்களின் அரிய முயற்சியால் தமிழ்ப் பழநூல்களுள் எஞ்சியுள்ளன வெளிப்படுத்தப்பட்டு வருகின்றன. அவைகளிலிருந்து பன்னூறு புலவர்களின் பெயரை அறிகின்றோம். அவைகளை வெளிப்படுத்திவரும் பெருந்தகையாளர்கள்பால் தமிழ் மக்கள் அனைவரும் நன்றி பாராட்டக் கடன்பட்டோராவர்.

வெளிவந்த நூல்களுட் சிலவே தமிழின் பழமை, பெருமைகளை விளக்குதற்குப் போதியவாகும். அங்ஙனமாகவும், பிறமொழியாளர்கள், அவ்வம் மொழியிற் புலவராயிருந்தாரின் சரிதங்களையும், அவர்களியற்றிய நூற்பொருணுட்பங்களையும் ஆராய்ந்து விரித்தெழுதி மாண

வர்கள் கற்கும்படி செய்வதுபோல், தமிழ் மக்கள் செய்திலர். சில சிறந்த புலவர்களைப்பற்றித் தம்மனம் போனபடி சிலர் புனைந்துவிட்டனர். தமிழ்ப் புலவர் பலரையும்பற்றி ஆராய்ந்து தொகுத்தெழுதிய புத்தகங்

முகவுரை.

கள் இரண்டொன்றே யுள்ளன. அவையும் தக்காங்கு விரித்தெழுதப்பட்டில. இரண்டொரு புலவர்களைப் பற்றியே சற்றுவிரிவாக எழுதிய புத்தகங்க ளுள்ளன. ஆகலின் தமிழ்ப் புலவர் பலருடைய வரலாறுகளையும் விரித்தெழுத வேண்டுமென்னும் ஆசையாற் றூண்டப் பட்டு, நல்லிசைப் புலவர்களின் பெருமைகளை உள்ளவாறு விளக்குதற்குச் சிறிதும் தகுதியில்லாத யானும் நக்கீர னாரைப்பற்றி முதலில் எழுதி வெளியிடத் துணிந்தேன். இஃது ஐந்தாறு வருடங்களின் முன்பே எழுதப்பெற்ற தாகலின், 1915-ஆம் ஆண்டில் நான் எழுதி வெளியிட்ட ஓர் சிறு புத்தகத்திலும் இதனைச் சுட்டுமாறு நேர்ந்தது. எனினும், இப்பொழுது, முன் எழுதியிருந்தவற்றிற் சிலவற்றை மாற்றியும்; சில சேர்த்தும் எழுதியுள்ளேன். நான் எழுதியவற்றிற் பிழைகள் பல இருப்பினும், உண் மையை ஆராய்ந்தெழுதவேண்டுமென்னும் என் நோக் கத்தை மதித்து, அறிவுடையோர் ஆதரிப்பரென்னும் துணிபுடையேன்.

என்பாற் பேரன்புடையவர்களான என் **பழைய மாணாக்கர்கள்** இதனை வெளிப்படுத்துமாறு முன்வந்து உதவி புரிந்தார்கள். அவர்கள் எவ்வகை நலனும்

பெற்றுப் பிறர்க்கென முயலும் பெற்றியராய் நெடிது வாழுமாறு எல்லாம் வல்ல முழு முதற் கடவுளின் திருவருளைச் சிந்திக்கின்றேன்.

இது விரைவில் அச்சிடப்படுதற்குப் பெரிதும் உதவிபுரிந்த உண்மைத் தமிழன்பரான **திருவாளர் S. அற்புதசாமி உடையார்**, B.A., L.T., **அவர்களுக்கும்**, இதனை வெளிப்படுத்துதவிய **கரந்தைத் தமிழ்ச் சங்கத்தினர்க்கும்** நன்றிபாராட்டக் கடமைப்பட்டுளேன்.

மு. வே.

# நக்கீரர்

## முதலாம் அதிகாரம்.

### நக்கீரர் வரலாறு.

#### முன்னுரை.

**நக்கீரர்** படைப்புக்காலந் தொடங்கி மேம்பட்டு வந்த பழங்குடியினரான முடியுடைத் தமிழ்வேந்தர் மூவருள்ளே ஈண்டிய சிறப்பிற் பாண்டியரானோர் வழி வழியமர்ந்த பழவிறன் மூதூராகிய பீடுமிக்க மாடமதுரையிற் சங்கமிருந்து தமிழாராய்ந்த நல்லிசைப்புலவர் குழாத்துட் பல்லிசை நிறுத்த படிமையோராவர். இவர், குடிப்பிறப்பாகிய உடையுடுத்துக், கல்வியாகிய

மலர்சூடி, ஒழுக்கமென்னும் விழுக்கலன் பூண்டு, வாய்மை யென்னு முணவுண்டு, நடுவுநிலையென்னும் நகரின்கண் தூய்மையென்னும் ஆதனத் தமர்ந்து, அழுக்காறின்மை, அவாவின்மை யெனப்படும் இரு பெரு நிதியமும் ஒரு தாமீட்டுந் தோலா நாவின் மேலோராகித், தமக்கொப்பாரும் மிக்காருமில்லையாக விளங்கினரென இவரது வரலாறு கூறுநிற்கும். அக்காலத்துப் புலவரெல்லாரும் பாட்டியற்றிய மட்டிற் பெயர் சிறந்தாராக, இவர், பாட்டுப் பல புனைந்ததன்றி, ஆலவாய்ப் பெருமா னடிக ளருளிய பொருணூலுக்குப் பொருள் காணாது மயங்கிய யாவருந் தெருளுறுமாறு சிறந்ததோருரைகண்டு புகழ்சிறந்து விளங்கினர். அவ்வுரை பின்னுளோ ருரைகட்கெல்லாம்



உரையாணியாய் நிற்பதொன் றென்னலாம். இன்னணம் பல்லாற்றானும் புகழ்மிகப் படைத்த இவ்வாசிரியர் வரலாற்றினை யாம் அறிந்து கோடற்குக் கருவியாயிருப்பன இவரியற்றிய நூல், உரைகளும், திருவிளையாடல் முதலிய புராணங்களும், பிறவுமாம்.

## பெயர்க்காரணம்.

இவரது இயற்பெயர் கீரன் என்பது. இப்பெயரின் பொருள் அக்காலத்து வழங்கிய ஏனைப்பல பெயர்ப் பொருளுமொப்பவே யின்னதெனத் துணிந்திடற்கரிதாக வுள்ளது. **பாலப்பன்** என்பது இவரது பிள்ளைத் திரு

நாமம் என்றும், இவர் புலமை நிரம்பியோராய்த் தமிழ்ச் சங்கமடைந்தபின்னர் முற்பெயரின் பொருளுக்கேற்பவே, '**கீரன்**' என அழைக்கப்பட்டனரென்றும் ஒரு சாரார் கூறுவர். கீரன் என்பது 'வாக்மி' எனப் பொருள்படுவதோர் வடசொற் சிதைவென்று பிறிதொருசாரார் கூறுவர். பிறர் பிறவாறுங்கூறுப. இதன் பொருள் யாதானும் ஆக; கீரந்தை, கீரங்கண்ணன், கீரங்கீரன் எனத் தமிழ்ச் செய்கை முடிபுற்றடிப்பட்டு வழங்குஞ் சொற்களையெல்லாம் தக்க ஆதாரமின்றியே வடசொல்லெனக் கூறி விடுதல் கருத்தன்றாம். இவர் கலையெலாம் நிரம்பிக், கூரியவறிவும், சீரியவொழுக்கமு முடையராய் விளங்கிய போழ்து இவரது சிறப்புநோக்கி நகரவிடைச்சொல்லும், 'ஆர்' விகுதியும் தந்து **நக்கீரனார்** என அறிஞரெல்லாம் வழங்குவாராயினர். 'குலவினையல் நம்பி' என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளுரையில், 'நப்பின்னை' யென்பதனை விளக்குழி 'நப்பின்னை—அவள் பெயர். ந - சிறப்புப் பொருளுணர்த்துவதோ ரிடைச்சொல்; நச்செள்ளை, நப்பாலத்தன், நக்கீரன் என்றாற்போல' என நச்சினார்க்கினி



யர் கூறுதல் காண்க. இவர் தந்தை * கணக்காயரென்பது இவர்க்கு வழங்கும் கணக்காயனார் மகனார் நக்கீரனார் என்னும் பெயரானும், இவர் மகனார் † கீரவிகொற்றனார் என்றது களவியலுரையானும் அறியப்படுவன. கணக்காயர்

என்னுஞ் சொற்குப் பிள்ளைகளைக் கூட்டமாகச் சேர்த்து வைத்து, அரிச்சுவடி என வழங்கும் தமிழ்க் கணக்குப் பயிற்றுவிப்பவர் என்று ஒரு சாரார் பொருள் கூறுப. தமிழெழுத்துக்களின் றொகுதிக்குத் தமிழ்க்கணக்கு, தமிழ் நெடுங்கணக்கு எனப் பெயருளவாயினும், ஈண்டு அதுவே பொருளெனக்கொள்ளுமாறில்லை. தமிழ்ப் பழ நூல்களையெல்லாம் கீழ்க்கணக்கு மேற்கணக்கெனப் பகுத்திலக்கணங் கூறலானும், 'கணக்கினை ...... கற்றலிற் கேட்டலே நன்று' என வழக்காறுண்மையானும், கணக்கென்பது நூல் என்னும் பொருட்டாதல் பெறப்படும். நூல்களெல்லாம் ஒவ்வோரளவினவாக இயன்றமையின் கணக்கென வழங்கப்பட்டனபோலும்? சமயக்கணக்கர் என்புழியும் கணக்கு இப்பொருட்டாதல்வேண்டும். 'எழுத்துமெண்ணுங் கணக்கென்றாகும்' என்று பிங்கலத்தில் எண்ணுடன் வைத்தோதிய எழுத்து இலக்கணமென்னும் பொருளதாகுமெனல் அமைவுடைத்தேயாகலின் இலக்கணமும் கணக்கெனப்படுமென்க. இனி, 'கணக்காயரோதிதுரைப் போர்', 'கணக்காயர் நூலுரைப்போர்' என்று நிகண்டுகள் கூறுவதும், 'கணக்காயர்' என்று கீழ்க்கணக்குக்கள் கூறுவதும், கணக்காயராவார் தொல்கேள்வித் துறைபோகிய நல்லாசிரியன்மாரென்பதனை நன்கு விளக்குவன

---

* குறுந்தொகையில் ஓர் பாட்டு 'கணக்காயன் றத்தன் பாடியது' என்றிருப்பது கொண்டு இவரது இயற்பெயர் தத்தன் என்று சிலர் கருதுகின்றனர்.

† கீரங்கொற்றனார் என்பது எழுதுவோரால் திரிபுற்றதுபோலும்?

வாகும். மதுரைக் கணக்காயனார் பாடிய பாட்டுக்கள் தொகைநூல் பலவற்றிற் காணப்படுதலே யவரது புலமைக்குத் தக்க சான்றாகும் †. இவ்வாறாகலின் 'மகனறிவு தந்தையறிவு', 'மகனுரைக்கும் தந்தை நலத்தை' என்ற முதுமொழிகளின்படி நக்கீரரது அறிவு மாட்சிக்கு அவரது பிறப்புங் காரணமாய் நின்றமை காண்க.

## குலம்.

இனி, இவர் குலத்தைப்பற்றியும் பலர் பலவாறு கூறுநிற்பர். 'கொங்குதேர்வாழ்க்கை' என்னுஞ் செய்யுட் பொருள்பற்றிச் சொக்கநாதர்க்கும் நக்கீரனார்க்கும் வாது நிகழ்வுழி,

> 'அங்கங் குலுங்க வரிவாளி னெய்தடவிப்
> பங்கம் படவிரண்டு கால்பரப்பிச்—சங்கதனைக்
> கீர்கீ ரெனவறுக்குங் கீரனோ வென்கவியை
> யாராயு முள்ளத் தவன்.'

என்று சொக்கர் வெகுண்டு கூறுநிற்ப, அதற்கெதிராக நக்கீரரும்,

> 'சங்கறுப்ப தெங்கள்குலந் தம்பிரான் கேதுகுலம்
> பங்கமறச் சொன்னாற் பழுதாமே—சங்கை
> யரிந்துண்டு வாழ்து மரனுரைப் போல
> விரந்துண்டு வாழ்வ திலை.'

என இறைவரைப் பழித்துரைத்தனர்; என்று ஓர் கதை வழங்குகிறது. இதற்கு ஆதாரமாகக் காணப்படுவது பழைய திருவிளையாடலிலுள்ள,

† சிறந்த புலவராயினும் நெடுங்கணக்குக் கற்பித்தல் கூடாதென்பது எம்கருத்தன்று.



'அங்கங் குலுங்க வரிவாளி னெய்யென்றோர்
பங்கக் கவிதை பரமன் சொலவிளிந்து
சங்கறுப்ப தெங்கள்குலந் தம்பிராற் கேதென்றோர்
துங்க முறுங்கவிதை சொன்னா னெதிர் துணிந்து.'

என்னுஞ் செய்யுளொன்றே. இச்செய்யுள்தானும் இதற்கு முன்பின் உள்ள செய்யுட்களை நோக்குழி அவ்விடத்திற்கு வேண்டாத தொன்றாகக் காணப்படுதலின், இது பின்னுளோர் இடைப்புகுத்தெனக் கோடலே யேற்புடைத்து. எல்லா முழுமுதன்மையு முடையராய், எல்லா வான்மாக்களையும் அடிமையாகவுடைய விறைவர் நக்கீரனாரைக் கோட்டியுட் குடிபழித்தனரெனலும், நல்லிசைப் புலவராகிய கீரனாரும் அவற்கெதிராகப் பழித்துரைத்தாரெனலும் தெருளற்பாலவாமோ? அன்றி, இக்கதைக்குச் சிறந்த வாதாரமுமில்லை. இக்கதை பற்றுக்கோடாகவே புலவர் புராணமுடையாரும், நக்கீரனை நெய்தனிலத்துள்ள வோர் பரதவரில்லிற் பிறந்தவனெனக் கூறிப்போயினர்.

இக்கதையினையும்,

‘வேளாப்பார்ப்பான் வாளரந்துமித்த
வளைகளேந் தொழிந்த கொழுந்து’

என்னும் அகப்பாட்டடிகளையும்,

‘யாகம் பண்ணாத ஊர்ப் பார்ப்பான்—இவர்களுக்குச் சங்கறுக்கையுந் தொழில்.’

என்னும் உரைக் குறிப்பையும் ஆதாரமாகக்கொண்டு, நக்கீரர் வேள்வி யியற்றாது சங்கறுக்குந் தொழில் மேற்கொண்ட பார்ப்பாராவர் எனக் கூறுவர், **திரு. மு இராகவையங்கார்.** அவர், அங்ஙனம் வேள்வி யியற்



றாது தாழ்நிலை யெய்தியவர்க்கு வேட்பித்தல், ஓதுவித்தல் முதலிய சிறந்த தொழில்கள் உளவெனக் கூறுவர். அதற்கவர் கண்டவாதாரம்,

‘திருமணி குயிற்றுநர் சிறந்த கொள்கையோ
டணிவளை போழுநர்.’

என்னுஞ் சில்ப்பதிகாரவடியில் ‘சிறந்த கொள்கை’ என்றிருப்பதுவே யாகும். சிலப்பதிகாரத்திற்கு உரை கண்ட இரு பெரும் புலவரும் இதற்கு இப்பொருள் கொள்ளவில்லை. இவ்விடத்தில் ‘சிறந்த கொள்கை’ என்பதற்கு வேட்பித்தல் முதலிய பொருள் கொள்ள விருக்கும் பொருத்தத்தினை யாம் அறிந்திலம். அன்றியும் வேட்டலே இலராயினார்க்கு வேட்பித்தல் முதலிய கூறுதல் எங்ஙனம் பொருத்தமாகும்? இவர் கொண்ட

படியே வைத்துக்கொளினும் சங்கறுக்குந் தொழிலுடையார் பார்ப்பார் மாத்திரமேயோ ?

இனி, 'வேளாப்பார்ப்பான்' என்பதன் பொருளை ஆராய்ந்து காண்பாம். 'பார்ப்பான்' என்பது ஒரு காரணப் பொதுச் சொல். இச்சொல் அடையின்றிக் கூறுங்கால் இடுகுறி மாத்திரையாய் ஒரு சாதியுட் பிறந்தானைக் குறிக்கும். அடையொடு படுக்குங்கால் வேறு பிறரைக் குறிப்பதுமாகும். * 'மூவகை, ஆரெயி லோரழ லம்பின் ....எய்த....பைங்கட் பார்ப்பான்' என்புழிச் சிவனைக் குறிக்கின்றது. '† பார்ப்பான் குண்டிகையிருந்த நீரும் குளுகுளு கொதித்தது.' என்புழி அயனைக் குறிக்கின்றது. இவ்வாறே வேளாப்பார்ப்பார் என்பது கொற்றொழில்புரியும் மரபினரைக் குறிப்பதாகும். 'இது புகழ்மா

* பரிபாடல்   † கம்பராமாயணம்.



வாகை', 'அடுபொருநன்' என்பனபோல வெளிப்படையாகும். பொற்கொல்லராதிய கம்மாளர்கள் தம்மை 'விசுவப் பிராமணர்' எனக் கூறிக்கொள்வதற்கு ஆதாரம் இருத்தல் வேண்டும். அகப்பாட்டுரைகாரர் 'ஊர்ப் பார்ப்பான்' எனக்கூறுவதும் இக்கருத்துப்பற்றியேபோலும்? விசுவப்பிராமணன் எனினும் ஊர்ப்பார்ப்பான்

எனினும் ஒக்கும். விசுவம் = உலகம். உலகம் என்னுஞ் சொல் நிலத்தின் ஒவ்வொரு பகுதியையும் குறித்தல் இருவகை வழக்கினும் காணப்படுகிறது. முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் நிலப்பகுதிகளை, காடுறையுலகம், மைவரையுலகம், தீம்புனலுலகம், பெருமணலுலகம் எனத் தொல்காப்பியர் கூறுதல் காண்க. அது மற்றும் சுருங்கி 'ஊர்' என்னும் பொருளில் வருதலை, ஊர்வாயிலை 'உலக விடைகழி' யென்றும், ஊரம்பலத்தை 'உலகவறவி' யென்றும் முறையே சிலப்பதிகாரமும், மணிமேகலையுங் கூறுதல் கண்டு தெளிக. வேளாப்பார்ப்பான் என்றது வாளரத்திற்கு அடை. வளைகளை தற்குக் கொள்ளினும் இழுக்கின்று. இங்குக் கூறியவாற்றால் நக்கீரர் பார்ப்பாராவர் என்பதற்குப் பிரமாணமின்மை காண்க. அவர் அந்தணராகார் என்பது எம் கருத்தன்று. இன்ன மரபினரவரெனத் துணிதற்குத் தக்க மேற்கோள் எமக்கிதுகாறுங் கிடைத்திலது. வேண்டிடின் யாம் அவரை, விருந்துபோற்றிய வேளாளரென்றும், அகப்பொருள் விரித்த புகழ்ப்பெரு வணிகரென்றும், புவியரசேத்து கவியரசென்றும், செந்தண்மை பூண்ட அந்தணரென்றும், பிறபிறவாறும் பாராட்டுதல் பொருந்துவதாகும். *

---

* சீர்கருணீகர் புராணம் என்பதொன்று நக்கீரரியற்றியதென்றும் அதனால் அவர் வேளாளரில் கருணீகர் அல்லது கணக்கர் வகுப்பினரெனக் கருதப்படுகிறதென்றும் கூறுவாரும் உளர்.

## சமயம்.

இவரது சமயம் சைவமென்றே நூல்களானும் பரம்பரை வழக்கானு மறியப்படுகின்றது. இவரே யன்றிச் சங்கப் புலவர் பலரும் சைவரென்றே சைவநூல்கள் கூறுகிற்கும். 'பொய்யடிமையில்லாத புலவர்' என்று ஆரூடைய நம்பிகள் திருத்தொண்டத்தொகையு ளோதியது சங்கப்புலவர்களையேயெனப் பின்னுள்ள பெரியோர் பலருங் கொண்டனர். முதல் இராசராச சோழர் காலத்து நம்பியாண்டார்நம்பி யியற்றிய திருத்தொண்டர் திருவந்தாதியில், பொய்யடிமையில்லாத புலவரைக் குறித்து,

'தரணியிற் பொய்ம்மை யிலாத்தமிழ்ச் சங்க மதிற் கபிலர்
பரணர்நக் கீரர் முதனாற்பத் தொன்பது பல்புலவோர்
அருணமக் கீயுந் திருவால வாயரன் சேவடிக்கே
பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்களே.'

என்று கூறியிருத்தலுங் காண்க. தமிழகத்துத் தொன்றுதொட்டுள்ள மதம் சைவமேயாமென்பதும் ஒருசாரார் கொள்கையாகவுள்ளது. அஃது எவ்வாறாயினும், பழந்தமிழ் மக்கள் எத்தெய்வத்தையும் எத்துணையும் நிந்தை புரியுங் குணமுடைய ரல்லரெனச் சங்கத்துச் சான்றோர் நூல்களானே நன்கறியலாகும். நக்கீரர் தொகையிலும், பாட்டிலும் இயற்றியுள்ளனமட்டில் அவர் எம்மதத்தினையாதல் கடிந்திருப்பது காண்கின்றிலம். மணிமிடற்றிறை, மணிவண்ணன், வாலியோன், முருகன், இந்திரன் என்ற

கடவுளர்களைப் புகழ்ந்துரைத்திருக்கின்றனர். முருகக் கடவுள்பால் மெய்யன்புடையரென ஆற்றுப்படையா லறியலாகும். பதினொராந் திருமுறையிலுள்ள பிரபந்தங்கள் சைவசமயத்தின் மேம்பாட்டைக் கிளந்தோதுகின்றன.

## நக்கீரர். 9

### பெருமை.

இவர் பொய்யில் கேள்விப்புலமையுடையாரென்பது இவரியற்றிய நூல்களானே யறியக்கிடக்கின்றது. அகத்திலும், புறத்தினும் பலதிணையும் நலமுறப் பாடுந் திறனுடையவர். ஒவ்வொரு பொருளையும் நேரிற் கண்டாங்குப் புலங்கொளச் சொல்லும் கலங்கா வறிவினர். இவர் யாருடனும் எத்துணையும் சலிப்பின்றி வாதியற்றி வலங்கொள்ளும் மதுகையுடையாரென்பதும்; தாம் மெய்யல்லதென வறிந்த வொன்றைத் தமக்கு வரும் ஏதங்குறித்தாதல், வேறெவ்வாற்றானுதல் மெய்யெனக் கொள்ளலும், அங்ஙனமே தாம் மெய்யென வறிந்ததை நெகிழவிடுதலும் செய்கிலாக் கடைப்பிடியுடையாரென்பதும்; திரிபுரமெரித்த விரிசடைப்பெம்மானுடன் வாதித்து நெற்றிக் கண் காட்டினும் குற்றம் குற்றமே எனச் சாதித்தனரென்னு மிவரது வரலாற்றாற் றெளியப்படும். இவர், எவரினுங்காட்டில் நுண்மாணுழை புலமுடையரென்பது, அளவியையார்க்கு மறிவரியான் றந்த களவியற்கு மெய்ப்பொருள் கண்டமையாற் றெளியப்படும். இவர், மனமாசு தீர்ந்து ஒன்னார்த்தெறலும் உவந்தாரை யருளலும் கை

வரப் பெற்றவரென்பது, 'கொண்டான்' என்பான் சாவவும் வாழவும் பாடியவாற்றாற் றெளியப்படும். அச்சரிதை வருமாறு:—

நக்கீரனார் சங்கத்து வைகுநாளில் ஆரியம் வல்ல 'கொண்டான்' என்னுங் குயவன், பட்டி மண்டபமேறி, 'வடமொழியே' சிறப்புடையது தமிழ் சிறப்புடைய தன்றெனத் தமிழை யிழித்துக் கூறினன். அது கேட்ட நக்கீரர், 'வடமொழியே தமிழைச் சிறப்புடைய மொழியென்று ஒப்புக்கொள்ளுகின்றது தமிழினை யிகழ்ந்து நின்னை இப்பொழுது இறக்கும்படி கூறுவல்' என்று,



'முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி—அரணிலா [டான்
ஆனந்த வேட்கையான் வேட்கோக் குயக்கொண்
ஆனந்தஞ் சேர்கசுவா கா.'

எனக் கூறலும், அவன் அவ்விடத்தே வீழ்ந்து உயிர் துறந்தான். அது கண்ட ஏனையோர் வந்து வேண்டிக் கொள்ள,

'ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தாற் காலக்கோட் பட்டானைச்—சீரிய
அந்தண் பொதியி லகத்தியனா ராணையாற்
செந்தமிழே தீர்க்கசுவா கா.'

என்று பாட, அவன் உயிர்த்தெழுந்தனன் என்பது.

'நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திர மென்ப.'

என்னும் செய்யுளியற் சூத்திர வுரையில், பேராசிரியரும், நச்சினார்க்கினியரும் இவ்வெண்பாக்களை யெடுத்துக்காட்டி 'இவை, தெற்கில் வாயில் திறவாத பட்டி மண்டபத்தார் பொருட்டு, நக்கீரர் ஒருவன் வாழவும் ஒருவன் சாவவும் பாடி, இன்னவாறாகவெனச் சபித்தற் பொருட்டாய் வந்த மந்திரம் பாட்டாய் வருதலின் அங்கதமாயின' என்று கூறிப் போந்தனர். இங்ஙனம் தொல்லாசிரியர்களாலே நிறைமொழி மாந்தராக எடுத்துக்காட்டப் பெற்றமையின் ஆசிரியர் நக்கீரனாரது பெருமை அளப்பரிய தொன்றாகும். இவரது கல்வி வன்மைபற்றி 'இனைவறு குறுமுனி யிலக்கணம் பெறப், புனைதரும் இலக்கியப் புலவர் சிங்கம்.' என்று கற்பனைக் களஞ்சியமாகிய துறைமங்கலம் **சிவப்பிரகாசர்** கூறினர். கவியரசாகிய **கச்சியப்ப சிவாசாரியரும்**, 'பொய்யற்ற கீரன் முதலாம் புலவோர்



புகழ்ந்த, ஐயன்' என முருகப் பெருமானைப் பாராட்டு முகத்தானே நக்கீரனாரது பெருமை தெரித்தனர். சுருங்க வுரைக்கில், இவர் சங்கப் புலவர்களிற் றலைவராய் வீற்றிருந்தமையே இவரது பெருமையை நன்கு புலப்படுத்தும் என்க.

### காலம்.

இனி, இவரும், இவருடனாகவும் சற்று முன்னாகப் பின்னாகவும் விளங்கிய அரசர்களும், புலவர்களுமாகிய இன்னவர் தம் காலத்தை வரையறுப்பான் எண்ணி ஆராய்ச்சி செய்தோர் பலராவர். அவரெல்லாம் தாம்

தாம் கண்ட ஆதாரங்களினாலே பாரதகாலத்திருந்து கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டுவரை இவர்கட்கு வேறு வேறு காலங்களைக் கற்பிப்பாராயினார். அவற்றுட் பலவும் பிழையாதல் காட்டிக் கண்டிக்கப்பட்டு, இவர்கள் கி. பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளில் விளங்கியவரென்னுங் கொள்கையே ஆராய்ச்சி வல்லுநர் பலரானும் நிலைபெறுத்தப்பட்டு வருதலின் யாம் இவர்காலம்பற்றி இங்கு வேறாராய்ச்சி நிகழ்த்துதல் வேண்டா. நக்கீரர் கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் விளங்கியவராவரெனக் கருதப்படுகிறது. இவர்காலத்து விளங்கிய புலவர்களும், அரசர்களுமாவார்:—

1. ஆலத்தூர்கிழார் 2. ஆவூர்மூலங்கிழார் 3. இடைக்காடனார் 4. இடைக்குன்றூர்கிழார் 5. ஔவையார் 6. கல்லாடனார் 7. கூடலூர்கிழார் 8. மதுரைமருதனிளநாகனார் 9. மாங்குடிகிழார் முதலியோரும்;

1. தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் 2. உக்கிரப்பெருவழுதி 3. இலவந்திகைப்



பள்ளித் துஞ்சிய நன்மாறன் 4. இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி 5. யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை 6. சேரமான்மாவெண்கோ 7. குட்டுவன் சேரல் முதலியோரும் ஆம்.

இவரன்றிக் குறுநிலமன்னரும், பிரபுக்களும் பலரிருந்தனர். கபிலர், பரணர், சாத்தனார் முதலிய புலவர்களும் ஆரியப்படைதந்த நெடுஞ்செழியன், கிள்ளி

வளவன், நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, செங்குட்டுவன், சேல்வக்கடுங்கோவாழியாதன் முதலிய அரசர்களும், பாரி, பேகன் முதலிய வேளிர்குல வள்ளல்களும் நக்கீரனூர் இளைஞராயிருந்த காலத்தும், சிறிது மூற்பட்ட காலத்தும் விளங்கினவராவர். * கரிகாற் பெருவளத்தான், இமயவரம்பன், நெடுஞ்சேரலாதன் என்னும் தமிழ்ப் பேரரசர்களும் இவர்க்குச் சிறிது முன்னுக கி. பி. முதல் நூற்றுண்டில் விளங்கினவராவர். இனி, அக்காலத்துத் தமிழகத்தின் நிலைமையைத் துருவி நோக்கின், அஃது உலகத்து ஏனைப்பகுதிகளினும் விளக்கமுற்றிருந்ததென்பது தேற்றமாம். உழவு, வாணிகம், நெய்வு, சிற்பம் என்னுந் தொழில்களும், உலகப் பொது வாழ்விற்கு வேண்டப்படும் பிறதொழில்களும் வளமுற்றிருந்தன. தமிழகம் தமிழ வரசரது காவலிற்றுனே பொருந்தியிருந்தது. தமிழ் வேந்தர்கள் ஒரொருகால் தம் தம் நாட்டினைப் பிரித்து ஆட்சிபுரிந்தும், ஒருவர் ஒருவரின் முரணி யடுத்தடுத்துப் போர் நிகழ்த்தியும் போந்தனர் என அறியப்படினும், அவர்கள் தத்தம் குடிகளை நன்கு புறங்காத்து, அன்னவர்க்குக் கண்ணும், ஆவியும் என்ன விளங்கினரெனத் தெரிகிறது. வீரத்தினும், நீதியினும்,

* கரிகாலன் முதலியோரை நக்கீரர் பாடியிருப்பது சென்ற கால நிகழ்ச்சிபற்றி யாகும்.



வண்மையினும் மேம்பட்டு விளங்கினர். தமிழ்ப் புலவர்கள் கூறும் மாசற்ற பாடல்களைக் கேட்டு மகிழ்ந்து,

வரையா வள்ளன்மை காட்டிப் போற்றி அவர்களை நன்கு மதித்து வந்ததன்றித் தாமும் புலமை சிறந்து விளங்கித் தம்முடைய உயரிய நோக்கங்களை யமைத்துப் பாட்டியற்றியும் விளங்கினர். புலவர்களும்,

‘பொருபடைதரூஉங் கொற்றமும் உழுபடை
ஊன்றுசால் மருங்கினீன்றதன்பயனே’ என்றும்,
‘நல்லதன் நலனும் தீயதன்தீமையும்
இல்லை யென்போர்க் கினனாகிலியர்’ என்றும்,

‘நான்குடன் மாண்டதாயினும் மாண்ட
அறநெறி முதற்றே யரசின்கொற்றம்’ என்றும்,

‘வரிசையறியாக் கல்லென்சுற்றமொடு
பரிவுதப வெடுக்கும் பிண்டம் நச்சின்
யானைபுக்கபுலம் போலத்
தானும் உண்ணான் உலகமுங் கெடுமே’ என்றும்,
‘நெல்லுமுயிரன்றே நீருமுயிரன்றே
மன்னனுயிர்த்தே மலர்தலையுலகம்
அதனால், யானுயிரென்ப தறிகை
வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே.’

என்றும் அரசர்களை நெருங்கி யறிவுகொளுத்தியும் போந்தனர். இவ்வாறாகவின் புலவரெல்லாம் அரசராயினார்க்கு அமைச்சர்போன்றும், நண்பர்போன்றும், இன்றியமையாது விளங்கினரென்னலாம். மற்றும் அக்கால வியல்பெல்லாம் இங்கு விரித்தெழுதின் ‘மற்றொன்று விரித்தல்’ ஆகுமென்று இவ்வளவில் நிறுத்துவேமாயினேம்.

## இடம்.

இவர் மதுரைக் கணக்காயனுர் மகனுர் நக்கீரரென்றும், மதுரை நக்கீரரென்றும் கூறப்படுதலின், இவரது பதி மதுரையேயாகும்.

## நக்கீரரியற்றிய நூல்கள்.

1. திருமுருகாற்றுப்படை.
2. நெடுநல்வாடை.
3. கைலைபாதிகாளத்திபாதித் திருவந்தாதி.
4. திருவீங்கோய்மலை எழுபது.
5. திருவலஞ்சுழி மும்மணிக்கோவை.
6. திருவெழுகூற்றிருக்கை
7. பெருந்தேவபாணி.
8. கோபப்பிரசாதம்.
9. காரெட்டு.
10. போற்றித்திருக்கலி வெண்பா.
11. கண்ணப்ப தேவர் திருமறம்.
12. நக்கீரர் நாலடி நாற்பது.
13. களவியலுரை.

என்பன.

இவையன்றி நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு என்பவற்றிற் சிற்சில பாடல்களும், திருவள்ளுவ மாலையிலுள்ள 'தானே முழுதுணர்ந்து' என்னும் வெண்பாவும் இவரால் இயற்றப்பெற்றுள்ளன. பதினோராந் திருமுறையிலுள்ளவற்றில் திருமுருகாற்றுப்

படையல்லாத பிரபந்தங்கள் இவரியற்றியவையல்லவென்பது சிலர் கருத்து. அது பின் ஆராய்ச்சி செய்யப்படும்.

---

## இரண்டாம் அதிகாரம்.

---

## நக்கீரரைப்பற்றிய புராண கதைகளின் ஆராய்ச்சி.

---

இனி, நக்கீரர் சம்பந்தமாகப் புராணங்கள் கூறுவனவற்றை ஆராய்ந்து காண்பாம். சிவாநுபூதிமானாக விளங்கிய பரஞ்சோதியாரியற்றிய திருவிளையாடற் புராணங் கூறுமாறு :—

நக்கீரர், கபிலர், பரணர் முதலாகப் புலவர் நாற்பத் தெண்மர் திருவாலவாயுடைய இறையனாராகிய சோம சுந்தரக்கடவுளா லளிக்கப்பட்ட தெய்வமாப் பலகை மேவிச் சிவனு ராணை தாங்கிச் செந்தமிழாராய்ந்து போந் தனர். அன்னருடன் இறையனாரும் ஒருவராகப் புலவர் நாற்பானென்பதின்மராவர். அவரங்ஙனம் தமிழாய்ந்து போதருவாராக, மதுரையம்பதியில் அரிமாசுமந்த அரசுகட்டிலேறி அற்றைநாட் செங்கோலோச்சிய திரு வுடை மன்னனுவான், திருவாலவாயடிகட்கெனத் திருநந் தனவனம் உளதாக்கி, நாளும் சண்பகமாலை சாத்திச் சோமசுந்தரரைச் சண்பகசுந்தர ரெனப் பாராட்டிப் போற்றிவந்தமையின் சண்பகமாறன் என்றழைக்கப்பட்ட பாண்டியன் வங்கிய சூடாமணி என்பான். அவன் வயந்த காலத்து மாதேவியுடனேகி இளமரக்காவில் எழிலுறு செய்குன்றிற் பொழுதினை யினிது கழிப்பிவருவோன், ஆண்டு ஓர் வியத்தகு நறுமணமுணர்ந்து, இம்மணம் யாண்டு நின்று போந்ததாமெனச் சிந்தித்து மனைவியை நோக்கினன். நோக்குழி அன்னாள் கூந்தலினின்று அந்



நறுமணமுண்டாதல் கண்டு, 'இவள் கூந்தற்கு இஃது இயற்கையி னுளதோ? அன்றிச் செயற்கையி னுளதா யிற்றோ? இவ்வுண்மையறிந்துகொள்வல்.' என்று கருதி, 'என்னுளத்துளதாய ஐயத்தைத் தவிர்க்கவல்லார் இது பெறுக' என்று, ஆயிரம்பொன்னடங்கிய கிழி ஒன்றினைச்

சங்கமண்டப முன்னர்த் தூக்குவித்தான். அது கண்ட புலவரெல்லாரும் அரசன் மனக்கருத்திதுவென அறிய மாட்டாராயிருந்தனர். அப்பொழுது ஆதி சைவமரபிற் பிறந்தோனும், பிரமசாரியுமாய தருமியென்னும் அந்த ணன் சோமசுந்தரக் கடவுளின் சந்நிதியடைந்து, 'எம் பெருமானே! அடியேன், இளம்பருவத்தே தந்தை தாயரையிழந்த தமியேன்; இப்பொழுது ஓர் கன்னிகையை வதுவை முடித்துக்கொள்ளும் வேட்கையுடையேன். இல்லறத்தொடு பொருந்துதலின்றி நின்னடி யருச்சிக்கு நீர்மையனுவனே? ஐய! நீ யாவும் அறிதி. யாவர்க்கும் தந்தையும் தாயுமாகிய பெரும! என் மனத்துயர் போக்குதற்கிது சமயம். பாண்டியன் மனக்கருத்தினைப் புலப் படுத்தும் செய்யுளொன்று தந்தருள்க.' என்றிங்ஙனம் பலவாறு இரந்து வேண்டினன். வேண்ட, இறைவனும் உவந்து,

> 'கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
> காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
> பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
> செறியெயிற் றரிவை கூந்தலி
> னறியவு முளவோ நீயறியும் பூவே'

என்னுஞ் செய்யுளை இயற்றித் தந்தருளினர். அந்தணனும், அது பெற்றுவந்து சங்கத்தார் முன் காட்டினன். அவர்கள் அதனைப் படித்து அதிலுள்ள சொற் பொருட் பொலிவினை வியந்து அரசனிடஞ் சார்ந்து அதற்குப்

பொருள்கூறிக் காட்டினர். காட்ட, அரசனும், அது தன் கருத்தோ டொருமைப்பா டுற்றிருத்தலின் சிரந்துளக்கி மகிழ்ந்து, 'புல்வருடன் சென்று தருமிபொற்கிழி பெறுக.' என்றனன். என்ன, அன்னவனும் மன்ன னாணைப்படி சென்று கிழியறுக்கும் எல்லையில் அவ்வழிப்போந்த கீரன் கண்டு தடுத்துச் செய்யுளைக் குற்றமுடைய தென்று கூறிவிட்டனன். அதனைக்கேட்ட பனவனும் வாட்டம் மிக வுற்றுச் சிவசந்நிதி யடைந்து, 'இறைவ! நினது பாட்டிற் குச் சில்வாழ்நாட் சிற்றறிவுடைய புலவர் குற்றங் கூறினர். எனக்குப் பொருள் கிடைக்கா தொழியினும் ஒழிக. உல கத்தில் நின்னை யாவர் மதிப்பர்? நினக்கு இவ்விகழ்ச்சி யுண்டாயிற்றே.' என்று சொல்லி யிரங்கினன். இரங்க, அந்தச் சுந்தர விடங்கமூர்த்தி யானவர், ஓர் புலவராய்த் தோற்றஞ்செய்து, கற்றுச்சொல்லிகள் உடன்வரச், சங் கத்தை யடைந்து, 'நம் கவிக்குக் குற்றமியம்பினோர் யார்?' என்ன, நக்கீரர், 'நானே யியம்பினேன்.' என்றார். 'குற் றம் யாது?' என்று வினவ, 'கூந்தலுக்கு மலரின் சார்பா லன்றி மணமின்மையின் இக்கவி பொருட்குற்ற முடைத் து.' என்றிறுத்தார் நக்கீரர். 'பத்தினிப் பெண்டிர் கூந் தலும் தேவமாதர் கூந்தலுமோ?' என, 'அவையும் அன் னவே.' என்றனர். 'நீ வழிபடுங் கடவுளாய திருக்காளத் தி நாதர் பாகத்தமர்ந்த ஞானப்பூங் கோதையின் கூந்த லும் அத்தன்மைத்தோ?' என, அவர், ஒரு சிறிதும் அஞ் சாராய், 'அதுவும் அற்றே.' என்ச் சாதித்து நின்றனர். அப்பொழுது எம்பெருமானார் தமது நுதற்கண்ணினைச் சிறிதே காட்ட, அதுகண்டும் அவர் அஞ்சிற்றிலராய், 'நும்

மூடலமெல்லாம் கண்ணாயிடினும் நமதுபாடல் குற்றம்
குற்றமே.' எனச் சாதித்து, நுதல்விழிச் செந்தீயின்வெம்
மைபொறுக்கலாற்றாது, பொற்றாமரை வாவியில் வீழ்ந்து

2



மூழ்கினர். இறைவரும் தம் முருக் கரந்தருளினர். இன்
னணம் நிகழ்ந்துழி, நக்கீரர் துன்பக்கடலு ளாழ்ந்து வருந்
துதலையும், அவரில்லாது சங்கமானது மெய்யுணர்வில்
லாக் கல்விபோன்றும், வேந்தனில்லாக் குடிபோன்றும்
பொலிவு குன்றுதலையும் கண்டு, புலவரெல்லாரும் பொறுக்
கலாற்றாராய், வேண்டுவார் வேண்டிற்றை யீந்தருளும்
பரங்கருணைத் தடங்கடலாகிய சுந்தரேசர் சந்நிதியை
யடைந்து, குறையிரந்து நிற்ப, அவரும் தம் அருட்சத்தி
யாராகிய உமாதேவியாரோடும் எழுந்தருளி வந்து, புலவர்
பெருந்தகையாகிய கீரனை அருட்கண்ணால் நோக்கி
யருளினர். நோக்க, நக்கீரனார் பசுகரண மெல்லாம் பதி
கரணமாகத் திகழப்பெற்று, ஞானப்பூங்கோதையார் கூந்
தற்குக் குற்றங் கூறிய பிழையினைப் பொறுத்தாண்ட
பெருங்கருணைத் திறத்தினை நினைந்துநினைந் துருகுவோ
ராய், கைலைபாதி காளத்திபாதியந்தாதி பாடித் துதித்
தனர். துதிக்க, திருவடியைத் தந்து பிறவிக் கடலினின்
றும் கரையேற்றுவிப்பாராகிய முதல்வர், நக்கீரனாரது
கையினைத் தமது திருக்கையாற் பற்றி அவ்வாவியின் கரை
யேற்றுவித்தருளினர். வடிவொடு பெயர் செயலொன்று
மின்றியே மாற்ற மனங்கழிய நின்ற மெய்ப்பொருளாகிய
பரமசிவன், அருட்கோலந் தாங்கிவந்து, திருக்கையாற்

பரிசித்தற்கு எண்ணிறந்த பிறவிகளில் எல்லையில்லாது புண்ணியஞ் செய்துவந்த புலவரேறாகிய நக்கீரர், பின், **கோவப்பிரசாதமும், பெருந்தேவபாணியும், எழுகூற்றிருக்கையும்** பாடினர். தருமியும் பொற்கிழி பெற்றுச் சென்றனன். ஆலவாயுடையாரும் நக்கீரருக்கு மகத்துவமிக்க அகத்திய முனிவரால் இலக்கண வுபதேசஞ் செய்வித்தார் என்பது. சங்கத்தார் கலக நிகழ்ச்சி முதலியவும் இந்நூலிற் கூறப்பெற்றுள. இச்சரிதம் நம்பி திரு



விளையாடலிற் சிற்சில மாறுபாடுகளுடன் காணப்படுகின்றது. அவ்வேற்றுமைகளிற் சிறந்தன சில காட்டுதும்:—

சிவபிரான் புலவர்களோ டிருந்து தமிழாராயுங்கால், 'அன்பினைந்திணை' என்றெடுத்துப் பொருணூலருளிச் செய்தார். அதுகண்டு புலவரெல்லாம் மகிழாநிற்ப, நக்கீரர் மாத்திரம், 'இஃது என்றமிழில் ஐந்தாம் பனுவலுக் கொப்பாகா' தென்றனர். பின்னர், சொக்கப்பெருமான் வேறொரு கவிதை சொல்ல அதனையும் சிறப்பில தென வுரைத்தார். பின், ஆகாய வாக்கினால் இறைவனை யுணர்ந்து அனைவருந் துதித்தனர். சொக்கநாதர் சங்கத்து

வீற்றிருந்தபொழுது அவர்க்கு வழங்கிய பெயர் **மதுரைப் பேராலவாயர், இறையனார்** என்பன. பொருளதிகாரம்

'இறையனர் பொருள்' என்னும் பெயருடன் விளங்குவதாயிற்று. நக்கீரர், 'கொங்குதேர் வாழ்க்கை' என்னும் பாட்டிற்குக் குற்றங் கூறியபொழுது, புலவராக வந்த சொக்கநாதரால், 'அங்கங் குலுங்க' என்னுஞ் செய்யுள் கூறப்பட, அதற்கெதிராக நக்கீரரால், 'சங்கறுப்ப தெங்கள் குலம்' என்னுஞ் செய்யுள் கூறப்பட்டது. புலவரெல்லாரும் சுந்தரேசர் ஆணைப்படி முருகக்கடவுளமிசமாகிய உருத்திரசன்மனர் முன்னிருந்து, இறையனர் பொருளுக்கு உரைகூறிவர, நக்கீரர், கபிலர், பரணர் இம்மூவருரையுங் கேட்டபொழுது உருத்திரசன்மர் மெய்புளகுற்றுக் கண்ணீர் விடுத்தனர். அதுகண்ட புலவரெல்லாரும் மகிழ்சிறந்து அம்மூவருரையும் மெய்யுரையெனக் கொண்டு போற்றினர் என்பன. இந்நூல், இந்திரன் முடிமேல் வளையெறிந்த திருவிளையாடலில், நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாடிய வரலாறு காணப்படினும், அப்பாடல்கள் பிற்காலத்து வெள்ளி என்பவராற் பாடிச் செருகப்பட்டன என்று குறிக்கப்பட்டிருத்தலின் அதனை யீண்டு எழுதிற்றிலம்.

## 20 நக்கீரர்.

திருப்பரங்கிரிப் புராணம், நக்கீரச் சருக்கத்தில், திருமுருகாற்றுப்படை பாடிய வரலாறு கூறப்படுகிறது. அது வருமாறு :—

நக்கீரர், கடவுளரில் சிவபிரானையும், மானுடரில் பாண்டியனையும் தவிரப் பிறர் யாரையும் பாடுவதில்

லென்றிருப்ப, அஃதுணர்ந்த முருகக் கடவுளானவர் தம்மைப் பாடுவிக்கத் திருவுளத்தடைத்து, உக்கிரனண்டாபரணன் என்பானை அழைத்து, 'சரவணப் பொய்கைக்கட் போதரும் நக்கீரரை ஒரு குற்றங்கற்பித்து மலையிற் சிறைப்படுத்துக.' எனப்பணித்தனர். அண்டாபரணன், அப்பணியினைத் தலைமேற்கொண்டு, நக்கீரர் சரவணப் பொய்கையிற் போதந்து, சிவபூசனை புரிதரு போழ்தத்து, அருகிலிருந்த அரச மரத்தி னிலை யொன்றினைக் கிள்ளியிட, அவ்விலையின் ஓர் பகுதி நீரினும், பிறிதோர் பகுதி நிலத்தினும் வீழ்ந்து, அவ்விரு பகுதியும் முறையே மீனும் பறவையு மாகி, ஒன்றையொன்று பற்றி யிழுப்புழி, அதனைக்கண்ட கீரனார், இரக்கமேற்கொண்டு, அவற்றைப் பற்றி, நகத்தினாற் பிரித்துவிட்டனர். விடவே, அம்மீனும் பறவையும் வாயங்காந்து குருதி கான்று உயிர் நீத்தன. உடன், அண்டாபரணன், 'முருகப்பிரானது பரங்குன்றத்திற் கொலைப்பாதகம் புரிந்தனை.' என்று கூறி, அவரையெடுத்துச் சென்று, ஓர் மலைமுழைஞ்சினு ளடைத்திட்டான். நக்கீரனார், இது கந்தனைப் பாடாக்குறை யென்வுணர்ந்து, திருமுருகாற்றுப்படை பாடினர். அப்பாட்டினிறுதி 'கிழவோனே' என்று முடிந்திருத்தல் கண்டு, குமாரக் கடவுளானவர் நக்கீரரது கனவினிற்றோன்றி, 'நீ நம்மைக் கிழவன் என்றனை. நாம் கிழவராய் வரப் பன்னாள் செல்லவேண்டும்.' என்று சொல்லி மறைந்தருளினர். பின்னர், நக்கீரர்,

'குன்ற மெறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையா—யென்றும்
இளையா யழகியா யேறூர்ந்தா னேறே
யுளையாயெ னுள்ளத் துறை.'

என்னும் வெண்பாவாற் றுதித்தனர். இப்பாட்டினில் 'இளையாய்' என்றழைத்திருப்பது கண்டு நெடுவேளான வர் மனமகிழ்ந்து, பல்வகைத் தேவரும் புடைசூழ எழுந் தருளி, வேற்படைவிடுத்துக் குகையினைத் திறந்து நக்கீர ரைச் சிறைவீடு செய்தனர். அவரும், வெளிவந்து, அறுமுகப் பெருமானை மணிமயின் மேற்கண்டு, பலவாறு போற்றிசெய்து, திருமுருகாற்றுப்படையினை மெய்யன் புடனோதுவார்க்கு வேண்டும் வரங்களைத் தந்தருள வரம் பெற்று, நாடொறும் முருகப்பெருமானை வழிபட்டு வரு வாராயினர் என்பது.

சீகாளத்திப் புராணம், நக்கீரச் சருக்கத்தில், இறை வர்க்கும் நக்கீரர்க்கும் வாது நிகழ்ந்ததும், நக்கீரர் திரு முருகாற்றுப்படையும், கைலைபாதி காளத்திபாதித் திரு வந்தாதியும் பாடியதுமாகிய வரலாறுகள் சில வேறு பாட்டுடன் காணப்படுகின்றன. அவை வருமாறு:—

நக்கீரர், 'கொங்குதேர் வாழ்க்கை' என்னுங் கவிக் குக் குற்றங்கூறி, உமையம்மையின் கூந்தற்கும் இயற்கை மணமின்றெனச் சலஞ் சாதித்த காலையில், பாட்டியற் புலவராய் வந்த இறைவர், தமது நெற்றி நாட்டத்தையும், சடையினையும் காட்ட, 'நீ வடிவெலாங் கண்ணுகக் காட்டினும் நின்செய்யுள் இழுக்குடையதே. சடை கொண்டு வெருட்டல் வேண்டா. இதற்கு நான் தோற்றி

லம்.' என்று கீரனார் கூறினர். கூற, முற்றுணர் புலவ ராய முதல்வர், 'எம்மொடு முரணி யிமயப் பூங்கொம்பின் மைம்மலி கூந்தலையும் பழித்துரைத்த நீ இம்மையிற்



குட்ட நோயுற்றலைக.' என்றனர். என்னலும், நக்கீரர் அஞ்சி, மெய்பனித்துக், கழல்களில் வீழ்ந்திறைஞ்சி, 'கருணையங்கடலே! எந்தாய்!! நாயினேன் அறிவிலாது செய்த பிழையினைப் பொறுத்தருளிச் சாபப்பிணி தவிர்த் தாட் கொள்வாய்.' என்று வேண்டினர். வேண்டலும், கருணைவள்ளலானவர், சினந்தணிந்து, 'சென்று நீ கயிலை காணில் தீரும் இக்கொடு நோய்' என்று கூறிக் கோயிலிற் புக்கனர். நக்கீரரும், பரமசிவனது சாபத்தின் விளைந்த பிணியானது உடலம் போர்ப்ப, 'இனி இதனைக் கயிலை கண்டொழிப்பேன்.' எனத்துணிந்து, புலவர்களை யெல் லாம் தனித்தனி விளித்து, 'நுங்களோடு உடனுறை வாழ்வு நீங்கும் ஒரு பெரும்பாவியேனை மறவன்மின். என்று சொல்லி, அவரெல்லாம் தனித்தனி மார்புட னிறு கப்புல்லிக், கண்ணருவி சொரிந்து, உளங்குழைந் தழுதி ரங்கா நிற்ப, அரிதினிற் பிரிந்து, வையையின் வடகரை யடைந்தனர். அடைந்தவர்,

'என்றினி மதுரை காண்பேம்! எப்பகல் சவுந்த ரேசன்
றன்றிரு வடிகள் காண்பேம்! தாயையெஞ் ஞான்று காண்பேம்!
வென்றிவேற் றரும வேந்தர் வேந்தனை யெங்ஙாட் காண்பேம்!

ஒன்றுயிர்த் துணையாஞ் சங்கத் துறவையெப் பொ
ழுது காண்பேம்!'

'மாட்சிமிக்க வறிவினையுடைய புலவரெல்லாம் எம்மை மறந்து விடுவரோ? அரசர் கோமகனும் நினையான் கொல்லோ? சங்கப் புலவர் நாற்பத்தெழுவரென்று உலகங் கூறிவிடுமோ? தமிழின் இனிமையை இனி யார்க் கெடுத் துரைத்திடுவேம்?' என்று பலப் பல நினைந்து,



சுரநெறி கடந்து, புனல் நாடுபுக்குப், பெண்ணையும், பாலியுந் தாண்டித், திருவேங்கடங் கண்டு, ஏமகூடஞ் சென்று, கங்கை படிந்து, காசியுங் கேதாரமும் பணிந்து, வானுற நிவந்த இமயமலைக்கட் செல்லுவாராயினர். இன்னணம் உள்ளங்கால் வெள்ளெலும்பாக நடந்துகொண்டிருந்த புலவர் சிங்கமானவர், ஆண்டு ஓர் கடலனைய தடாகத்தையும், உலகினுக்கிட்ட ஒரு பெரும்பந்தர் போன்று தழைகளுவி, விழைதக நிற்கும் ஆலவிருக்கத்தையும் கண்டு சென்று, அவண் உளனமர்ந்திருப்பவர், அவ்வதிசய மரத்தின் இலையொன்று நீரினும் நிலத்தினும் பொருந்த விழுந்தது, மீனும் பறவையுமாய உருப்பெற்று, அவை யொன்றையொன்று கவ்வி யீர்ப்பக் கண்டு, விம்மித மெய்தித் தாழ்த்து நின்றனர். உடன், ஒரு கொடிய

பூதம் இவரை யெடுத்துச் சென்று, ஒரு குகையினுள் அடைத் தேகிற்று. அங்கு, அவ்வாறே, அப்பூதத்தினால் முன்ன ரடைக்கப்பட்டிருந்த தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்பதின்மரும் நக்கீரரைக் கண்டு, 'இன்று, நீ வந்தமையின் நாம் ஆயிரமென்னுந் தொகையுடையராயினேம். இனிப் பூதமானது நம்மனைவரையும் விழுங்கித் தன் வயிற்றுத் தீயினைத் தணிப்பதாகும்.' என்று அல்லலுற் றறைந்தனர். அது கேட்ட நக்கீரனார் சிறிதும் மனம் மாழ்கலின்றி, அன்னவர்தம் இடரினை யகற்றத் திருவுளத்தடைத்து, 'ஆறிரு தடந்தோ ளண்ணல் ஆறெழுத்தினையும் ஓதில் பிறவி யென்னும் அனாதி நோயுந் தீர்ந்து இன்ப வீட்டிற் குடிபுகுந் திருக்கலா மென்னின், வேறொரு பிணியகலுவதில் வியப்பு என்னுளது? ஐம்பூத வாயி னகப்படுமுயிரை மீட்டுச் செம்பதுமத் திருவடி நீழலில் வைக்கும் குமரவேளுக்கு ஒரு சிறு பூதத்தா லுற்ற இந்நோய் தீர்த்த



லரியதாமோ?' என நினைந்து, நினைந்தன நினைந்தாங்குதவும் திருமுருகாற்றுப்படையினைப் பாடினர். பாட, அறுமுகப் பெருமான் மயின்மிசை யிவர்ந்து தோன்றி, அனைவர்க்குஞ் சிறைவீடு செய்து, கீரனார் போந்த காரணங்கேட்டு, 'கைலைகாண' எனத் தமது திருத்தந்தையார் பொதுவிற் கூறியிருத்தலின், தென்கைலை காணினும்

இவருற்ற நோய் நீங்குமெனக் கருதி, 'இக்குளத்தினின் மூழ்கிற் கயிலை காணுதி' எனப் பணித்தனர். அவரும், தம்மை உய்யக்கொண்ட பெருங்கருணை வள்ளலாகிய முருகக்கடவுளின் ஆணையைச் சிரமேற்கொண்டு, குளத்தினின் முழுகிப், பொன்முகரி யென்னும் புனித நதியில் நோய் நீங்கியெழுந்து, தென்கயிலாய மாகிய ஸ்ரீகாளத்தியைத் தரிசித்தார். தரிசித்து, ஸ்ரீகயிலாயமும், ஸ்ரீகாளத்தியும் ஒன்றென்னுங் கருத்துடையராய்க் **கைலைபாதி காளத்திபாதித் திருவந்தாதியால்** அவ்விரண்டினையும் மாறி மாறித் துதித்து, உடற்பிணி தவிர்த்தாண்டாங்கு உயிர்ப்பிணியாய ஆணவ வல்லிருளகற்றி யாட்கொண்டருள வேண்டுமெனப் பிரார்த்தித்துக் காளத்தி யப்பருடைய திருவடி நீழலிற் கலந்தருளினர் என்ப.

நாம் இங்கெடுத்துக்கொண்ட நான்கு புராணங்களில், பரஞ்சோதி முனிவர் திருவிளையாடலானது, அந்தாதி, கோவப்பிரசாதம், பெருந்தேவபாணி, எழுகூற்றிருக்கை என்னும் நான்கு நூல்களையுஞ் சுட்டுகிறது. நம்பி திருவிளையாடல், அந்தாதியைச் சுட்டுவதுடன், இறையனார் களவிய லருளியவாறும், புலவரெல்லாம் அதற்குரை கண்டவாறும் கூறுகிறது. மற்றும் இந்நூல் கூறுகிற 'இறையனார் செய்யு'ளும், நக்கீரரது 'ஐந்தாம் பனுவ'லும் இன்னவெனப் புலப்படவில்லை. 'அங்கங்குலுங்க,' 'சங்கறுப்பது' என்னும் இரண்டு வெண்பாக்களும் இதனிற் சுட்



டிப்படினும், இவற்றைச் சுட்டும் பாடற்கு முன்பின்

உள்ள பாடல்களை நோக்குழி, அஃதியையின்றி யிருத்த லின், அப்பாட்டுப் பின்னுளோர் இடைப்புகுத்து எனக் கோடல்வேண்டும். பரங்கிரிப்புராணம், திருமுருகாற் றுப்படையுடன் 'குன்றமெறிந்தாய்' என்னும் வெண்பா வையுஞ் சுட்டுகிறது. சீகாளத்திப்புராணம், திருமுரு காற்றுப்படையையும், அந்தாதியையும் சுட்டுகிறது. 'கொங்குதேர் வாழ்க்கை' என்னும் பாசுரத்தைப் பரங் கிரிப் புராண மொழிந்த மூன்று நூல்களும் சுட்டுகின் றன. நக்கீரர் இயற்றிய ஏனைய நூல்களையும், பாட்டுக் களையும் இந்நான்கு புராணமும் சுட்டிற்றில. பழைய திருவிளையாடலொன்றும் சொக்கநாதர் புலவரா யமர்ந் திருந்த பொழுது அவர்க்கு இன்ன பெயர்கள் வழங்கின வென்று கூறுகிறது. மற்றைத் திருவிளையாடலொன் றுமே பாண்டியன் பெயரைக் கிளந்தோதுவது. சீகாளத் திப்புராணம் அக்காலத்துப் பாண்டிநாட்டில் நிகழ்ந்த வற் கடத்தை விரித்துரைக்கிறது. திருவிளையாடற் புராணம் இரண்டினும் பலவிடத்து வற்கடங் கூறப்படினும், இக் கதை நிகழ்ந்த காலத்தை யொட்டிக் கூறப்பட்டில. திருப் பரங்கிரிப் புராணமானது திருமுருகாற்றுப்படை திருப் பரங்குன்றத்திற் பாடியதாகக் கூறுகிறது. சீகாளத்திப் புராணம் அது இமயமலையிற் பாடியதாகக் கூறுகிறது. பிறவேறுபாடுகளும் ஆராய்ந்தறிக. தமிழ்நாட்டுச் சரிதங் களை வடமொழி வாணர் தாம் தாம் கேட்டவாறும், தத் தமக்குத் தோற்றியவாறும், வேறு வேறு காலங்களில் வடமொழியில் எழுதிவைப்ப, அவற்றைத் தமிழினிற் பெயர்த்தெழுத நேர்ந்தமையின், இந்நூல்களில் இங்ங

ளம் வேறுபாடுகள் காணப்படுகின்றன. இனி, இக்கதை களை யெடுத்துரைப்பவும், ஆதரிப்பவுமாய பிறநூன் மேற் கோள் முதலியன கூறுதும்.

## 26 நக்கீரர்.

தருமிக்குப் பொற்கிழி நல்குவிக்கச் சொக்கநாதர் 'கொங்குதேர் வாழ்க்கை' என்னும் பாட்டருளியதும், அவர் புலவராய்ச் சங்கமேறியதும்,

'பொதியப் பொருப்பன் மதியக் கருத்தினைக்
கொங்குதேர் வாழ்க்கைச் செந்தமிழ் கூறிப்
பொற்குவை தருமிக் கற்பு டனுதவி
யென்னுளங் குடிகொண் டிரும்பய னளிக்குங்
கள்ளவிழ் குழல்சேர் கருணையெம் பெருமான்

எனக் கல்லாடத்தும்;

'நன்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி
நற்கனகக் கிழிதருமிக் கருளினோன் காண்.

எனத் திருநாவுக்கரசு நாயனார் தேவாரத்தும் கூறப் பட்டுள.

இறையனார் களவிய லருளிச்செய்தது,
உலகிய னிறுத்தும் பொருண்மர பொடுங்க
மாறனும் புலவரு மயங்குறு காலை
முந்துறும் பெருமறை முளைத்தருள் வாக்கா
லன்பினைந் திணையென் றறுபது சூத்திரங்
கடலமு தெடுத்துக் கரையில்வைத் ததுபோற்

பரப்பின் றமிழ்ச்சுவை திரட்டிமற் றவர்க்குத்
தெளிதரக் கொடுத்த தென்றமிழ்க் கடவுள்.
எனவும்,

ஐந்திணை வழுவா தகப்பொரு ளமுதிணைக்
குறுமுனி தேறவும் பெறுமுதற் புலவர்க
ளேழெழு பெயருங் கோதறப் பருகவும்
புலனெறி வழக்கிற் புணருல கவர்க்கு
மூற்றவம் பெருக்கு முதற்று பதர்க்கு
நின்றமிழ் துணரத் தமிழ்ப்பெயர் நிறுத்தி
யெடுத்துப் பரப்பிய விமையவர் நாயகன்.' எனவும்,



கல்லாடத்தும்;

'திருவால வாயமர்ந்த செழுஞ்சுடரைச் செழும்
பொருணூல், தருவானை.'
எனவும்,

நூலின்கட் பொருள்பாடி நூலறிவார்க் கீந்தானை.'
எனவும்,

பெரிய புராணத்தும் கூறப்பட்டுளது.

முக்கட்பெருமான் சங்கமமர்ந்து தமிழாராய்ந்தது,

'சென்றணைந்து மதுரையினிற் றிருந்தியநாற் சங்
கத்துள்
அன்றிருந்து தமிழாராய்ந் தருளிய வங்கணர்'
எனவும்,

திருவாலவாயில், எம்மைப் பவந்தீர்ப்பவர் சங்க
மிருந்தது.' எனவும்,
பெரிய புராணத் தோதப்பட்டது.

முருகக்கடவு ளமிசமாகிய உருத்திர சன்மனார் களவி
யற் பொருள் தெளிவுறுத்தது,

'மணிக்கா லறிஞர் பெருங்குடித் தோன்றி
யிறையோன் பொருட்குப் பரணர்முதல் கேட்பப்
பெருந்தமிழ் விரித்த வருந்தமிழ்ப் புலவனும்
பாய்பா ரறிய நீயே யாகலின்.'

எனக் கல்லாடத்தும்;

திருத்தமிழ் மதுரைதன்னிற் சிவன்பொரு
ணிறுக்கு மாற்றால்
உருத்திர சன்மனாகி யுற்றிடு நிமலன்.'

எனக் கந்த புராணத்தும் ஓதப்பட்டது.

'இறையனார்' என்னும் பெயரைத் தலைச் சங்க
மிருந்த சிவனார்க்குக் கூறுவர் அடியார்க்கு நல்லார்.
'பேராலவாயார்' என்னும் பெயர் நற்றிணையிலும், அக



நானூற்றிலும், புறநானூற்றிலும் சில பாட்டுக்கள் பாடிய
ஒரு புலவர்க்கு வழங்குகிறது. 'கொங்குதேர் வாழ்க்
கை' என்னும் பாட்டு, குறுந்தொகையில் இரண்டாவது
செய்யுளாக அமைக்கப்பட்டுளது. திருவள்ளுவ மாலையி

னுள்ள 'என்றும் புலராது' என்னும் வெண்பா இயற்றி னாரும் இறையனாரே. திருக்குறள் அரங்கேற்றிய பொழுது வள்ளுவனாருடன் உருத்திரசன்மனார் வீற்றிருந் தனரென ஒரு வெண்பாக் கூறுகிறது. அகநானூறு தொகுத்தாரும் உருத்திரசன்மரே.

திருவிளையாடற்புராணம் கூறுகிற பாண்டியன் பெயர் வடமொழிவாணர் படைத்துக்கொண்டதாகல் வேண்டும். அக்காலத்து நெடுங்கிள்ளி, நெடுஞ்சேரல், நெடுஞ்செழியன் என்றாற்போலும் தமிழ்ப் பெயர்கள் வழங்கினவன்றிக், குலோத்துங்கன், இராஜசேகரன் என் றாற்போலும் வடமொழிப் பெயர்கள் வழங்கவில்லை. ஆகவின், வங்கிய சூடாமணி என்னும் பெயர் பிற்காலத் தார் படைப்பு என்பதே துணிபு.

சீகாளத்திப் புராணங் கூறுகிற வற்கட நிகழ்ச்சி,

'பன்னீரி யாண்டு பாண்டிநன் னாடு
மன்னுயிர் மடிய மழைவள மிழந்தது.'

என மணிமேகலையிலும்;

'அன்றுதொட்டுப் பாண்டியனாடு மழைவறங்
கூர்ந்து வறுமையெய்தி'

எனச் சிலப்பதிகாரத்தும்;

'அக்காலத்துப் பாண்டிய னாடு பன்னிரு
யாண்டு வற்கடஞ் சென்றது'

எனக் களவியலுரையிலும் கூறப்பட்டுளது. மற்றுஞ் சில அடுத்த அதிகாரத்திற் காட்டப்படும்.

---

## மூன்றும் அதிகாரம்.

## நக்கீர தேவரியற்றிய அந்தாதி முதலியவற்றின் ஆராய்ச்சி.

கைலைபாதி காளத்திபாதியந்தாதி முதலாகத் திருக்கண்ணப்பர் திருமறம் ஈறாகப் பதினொராந் திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ள நக்கீர தேவ நாயனார் பிரபந்தங்களில், திருமுருகாற்றுப்படை யொழிந்த ஒன்பது நூல்களும் கணக்காயனார் மகனார் நக்கீரனாரியற்றிய வல்லவென ஒரு சாராரும், அவரியற்றியவே யெனப் பிறிதொரு சாராரும் கூறுப. அவ்விரு கொள்கையையும் ஆதரிப்பன இவையிவையென ஓர்ந்துணர்வேமாக.

1. பிற்காலத்தார் பாவின மெனக்கொண்ட கட்டளைக் கலித்துறை போல்வன சங்கநாளில் வழங்கவில்லை.

2. ஒரு செய்யுளி னந்தம் அடுத்த செய்யுளுக்கு ஆதியாக வரத்தொடுக்கப்படும் அந்தாதி, மும்மணிக்கோவை முதலிய பிரபந்தங்களும் பழைய நாளில் இயற்றப்பட்டில. இவற்றுக்கெல்லாம் தொல்காப்பியத் திலக்கணமு மில்லை.

3. திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை முதலிய பாட்டுக்களுக்கும், நக்கீரதேவர் அந்தாதி முதலியவற்றுக்கும் உள்ள நடைவேற்றுமை சாலவும் பெரிது.

4. சங்கத்தார் நூல்கள் பிற சமயங்களைத் தாழ்த்துக் கூறுவனவல்ல. அந்தாதி முதலியன அன்னவல்ல.

5. இவை பண்டை யுரையாசிரியர்களால் எடுத்தா

ளப்பட்டனவு மல்ல.



இவையெல்லாம் இப்பிரபந்தங்கள் நக்கீரர் வாக்கல்ல என்பதனை ஆதரிக்கின்றன. மற்றும் இவைகளை யாராய்வோம்.

1. தொல்காப்பியரால் பாவினம் கூறப்படவில்லை யென்பது உண்மை. சங்கத்தார் பாக்களே யியற்றிப் போந்தனர். அவற்றுள்ளும் வஞ்சிப்பா அருகியே வழங்குவ தாயிற்று. 'அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே.' என்னுஞ் செய்யுளியற் சூத்திரவுரையிற் பேராசிரியரும், 'தலை யிடை கடைச் சங்கத்தாரும், பிறசான்றோரும், நாற்சீரடியான் வரும் ஆசிரியமும், வெண்பாவும், கலியுமே பெரும்பான்மையுஞ் செய்தார். வஞ்சிப்பா சிறுவரவிற் றெனக் கொள்க.' எனக்கூறினர். நச்சினார்க்கினியரும் இவ்வாறே கூறினர். எனினும், இப்பிரபந்தங்கள் பெரும்பான்மையும் பாக்களா லியன்றவே யாகலானும், திருவலஞ்சுழி மும்மணிக்கோவையில் பிற்காலத்தார் பாவினத்து ளொன்றாகக் கொண்ட கட்டளைக் கலித்துறைச் செய்யுள் காணப்படினும், அது, தொல்காப்பியர் கூறியவாறு, கொச்சக வொருபோகு யாப்பின் வேறுபட்டு வந்ததாகக் கோடலமையு மாகலானும், இவ்வாதாரம் வலியுடையதாகாது. இவ் வொருபோகி னிலக்கணத்தைத் 'தரவின்றாகி' என்னுஞ் சூத்திரத்து, 'யாப்பினும் பொருளினும் வேற்றுமையுடையது, கொச்

சக வொருபோ காகு மென்ப.' என்பதற்கு உரையாளர் கள் விரித்துரைத்தன கொண்டு தெளியலாம். சீவக சிந்தாமணிப் பாடல்களெல்லாமும் கொச்சக வொருபோ கே யென்பர் நச்சினார்க்கினியர். 'தொல்காப்பியனாரை யொழிந்த ஆசிரியர் பதினொருவருட் சிலர் இனமும் கொண்டார்' ஆகலின், அதனை இனமெனவே கொள்ளி னும் அமையும்.

## நக்கீரர். 31

2. தொண்ணூற்றாறு வகையும் பிறவுமாகிய பிர பந்தங்கட்கும், செய்யுட்கள் அந்தாதியாக வருதற்கும், அடிகள் அந்தாதியாக வந்து தொடையுற்று நிற்றற்கும் தொல்காப்பியர் இலக்கணங் கூறிற்றிலர். எனினும், பிற் காலத்தார் அவ்வாறெல்லாங் கோடற்கு அவர் இடம் வைத்துச் சென்றனராவர். அவர், 'அம்மை' முதலாயின தொடர்நிலைச் செய்யுளுக்கு இலக்கணமாகக் கூறுமிடத் து, 'விருந்து' என்னும் வனப்புப்பற்றி, 'விருந்தே தானும், புதுவது கிளந்த யாப்பின் மேற்றே.' எனக் கூறி னர். அதற்குப் பேராசிரியரும், 'புதிதாகத் தாம் வேண்டிய வாற்றாற் பல செய்யுளுந் தொடர்ந்துவரச் செய்வது.' என உரை கூறி, 'அது, முத்தொள்ளாயிர மும், பொய்கையார் முதலாயினார் செய்த அந்தாதிச் செய்யுளுமெனவுணர்க. கலம்பக முதலாயினவுஞ் சொல் லுப.' என்றிலக்கியமுங் காட்டினர். நச்சினார்க்கினியர்க் கும் அது கருத்தென்பது அவருரையா னறியப் படுவது. மற்றும், அவர், 'குழவி மருங்கினுங் கிழவதாகும்.'

'ஊரொடு தோற்றமு முரித்தென மொழிப.' என்னும் புறத்திணையியற் சூத்திரங்கட்குப் பொருளெழுதிய விடத்தும் பிள்ளைக்கவியும், உலாவும் என்றிவற்றைப் பொருளாகக் கொண்டனர். இன்னணம் வழக்கொடு சிவணிய வகைமையானே புதிது புதிதாக நூலியற்றல் ஆசிரியர்க்குக் கருத்தாதல் பெறப்படுகின்றமையின், நக்கீரர் முதலாயினர் அந்தாதிச் செய்யு ளியற்றலிற் போந்த இழுக்கொன்று மின்மையானும், சங்கநாளில் ஈறு முதலாகத் தொடுத்துப் பாடும் வழக்குண்டென்பதற்கு, ஐங்குறுநூற்றின் நெய்தல் எட்டாம் பத்தும், பதிற்றுப் பத்தின் நான்காம் பத்தும் அந்தாதியாகத் தொடர்புற்றிருப்பது சரியாகலானும், இன்னோரன்ன பிரபந்தங்கள் பண்டைநாளில் இலவெனக் கூறு மிதுவும் திட்பமுடைத் தாகாது.



3. எட்டுத்தொகை, பத்துப் பாட்டாதிய வற்றோடி வற்றிடையுள்ள நடைவேற்றுமை யிறப்பவும் பெரிதே. அவற்றில் வடசொற்கள் எங்கேனும் ஒன்றிரண்டருகியே வழங்கும். இவற்றில், அவ்வாறின்றி, வடசொற்கள் மிகப் பல விரவியுள்ளன. சரணம், தீர்த்தன், தயா, அசலை, பாசுபதம், தேவாதிதேவன், பாதாரவிந்தம் என்றாற் போலும் வடசொற்களும், தொடர்களும், சந்திகளும் காணப்படுகின்றன. அவற்றில் அளபெடைகளும், 'செய்பு' என்னும் வாய்பாட்டுச் சொற்களும் மிக்குள்ளன. உதாரணமாகத் திருமுருகாற்றுப் படையினை யெடுத்துக்கொள்வோம்: அவ்வொரு பாட்டின்கண், நாற்பது அளபெடைச் சொற்களும், ஒருபது 'செய்பு' என்னும் எச்சச் சொற்களும் வந்துள்ளன. இவ்வொன்பது நூற்களிலும் ஓரளபெடையாதல், ஒரு 'செய்பு'

என்னு மெச்சமாதல் கண்டிலம். இன்னும் அவற்றிடை, கிறு, கின்று, ஆநின்று என்னும் இடைநிலைகள் வழங்க வில்லை; இவற்றிடை ஒன்பது கின்றிடை நிலைச்சொற் கள் வந்துள்ளன. இங்ஙனம் பல்லாற்றானும் வேறுபட்ட நடையினையுடைய நூற்களைக் கடைச்சங்கத்திருந்த நக்கீரனாரே யியற்றின ராவரோ என ஐயுற வுண்டாத லியல்பே. இதற்கெத்துணைச் சமாதானஞ் சொல்லினும் கேட்பவர் மனந் திருத்தியுறுமென நினைக்கின்றிலம். ஆசிரியர் தொல்காப்பியனார், 'வடசொற்கிளவி வட வெழுத்தொரீஇ, யெழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே.' என வடசொற்கள் தமிழில் வழங்குமாறு கூறினாராயினும், சங்கப் புலவரெல்லாம் அவை பெரிதும் தமிழிற் புகுதாமற் போற்றியே வந்தனர். எனினும், சம யக் கோட்பாடுகளை விரித்துரைப்பவும், பிறசமயங்களைக் கண்டிப்பவுமாய நூல்கள் சங்கத் தியற்றப்படாமையின், வடசொற் பெரிதும் பயில இடமின்றென்றும், அவை



யியற்றப்படுங்கால் வடசொற்கள் பயில்வனவா மென்றும் ஒரு சமாதானங் கூறலமையும். சங்கத்துச் சான்றோர்கள், சமயக் கொள்கைகளை விரித்துரைத்தல் தமிழ் வளர்ச்சி கருதிய சங்கத்தின் நடைபேற்றுக்குத் தடையாகு மென்று கருதினர்போலும். பிறமத நிந்தையின்றியே, கடவுளரிலக்கணங்களும், கடவுளர் வழிபாடுகளும் கூறப் புக்க பரிபாடலில், ஏனைத்தொகைகளிற் காணப்படாத வடசொற்க ளேறிவிட்டன. சாத்தனாரியற்றிய மணிமே கலையுள் பல்வேறு சமயக்கொள்கைகளும் அளவைகளும்

கூறியவிடத்து வடசொற்கள் மிகப் புகலுற்றன. வட சொல்லின் மிகுதிப்பாட்டிற்கு இவ்வொரு காரணஞ் சொல்லினும், நடையின் மற்றை வேறுபாடுகட்குத் தக்க காரணமில்லை. நடைப்போக்கொன்று கொண்டே இது நிச்சயிக்கத் தக்கதன் றென்று கூறுவதைத் தவிர, இங்குக் கூறலாகும் சமாதானம் பிறிதில்லை.

4. இப்பிரபந்தங்களில் வந்துள்ள,

'பிரமன் பெருந்தலை நிறைய தாகக்
கருமன் செந்நீர் கபால நிறைத்தனை.'

'கச்சங் கொண்டு கடுந்தொழின் முடியாக்
கொச்சைத் தேவரைத் தேவரென் றெண்ணிப்
பிச்சரைப் போலவோ
ராரியப் புத்தகப் பேய்கொண்டு புலம்புற்று'

என்பனபோலுந் தொடர்களை நோக்குங்கால், இவை பிற மதங்களைப் பொருட்படுத்தாது செல்லு மியல்பு விளங்குகிறது.

5. இவை பண்டையுரையாசிரியர்கள் எடுத்தாட்சி செய்த நூல்களுமல்ல. எனினும், இவற்றுடன் பதினொ ராந் திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ளதும், கபிலதேவ



நாயனார் அருளிச்செய்ததுமான மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலையிலிருந்து இரண்டு செய்யுட்கள் இளம்பூரணவடிகளால் மேற்கோளாக எடுக்கப்பட்டுள்ளன. உரையாளர்கள் எடுத்தாளாமையிற் போந்த இழுக்கொன்றுமில்லை யாயினும், இவை சங்கப்புலவர் வாக்கென்ப

தில் அவர்கட்குங் கருத்தில்லைபோலு மெனக் கொள்ளப் படுமன்றே?

இனி, இவை நக்கீரரியற்றியன வென்பதற்குள்ள ஆதாரங்களையும் பார்ப்போம். இவற்றுட் சில நூல்களை விதந்து, அவை சங்கப்புலவராகிய நக்கீரர் பாடியன வென்று புராணங்கள் கூறுகின்றன. புராண கதைகட்கு இந்நூல்கள் பொருத்தமுடையவாகவுமுள்ளன. **போற்றித் திருக்கலி வெண்பா** புராணத்திற் சுட்டப்படவில்லையேனும், இதினிறுதி, '**காளத்தி போற்றி கயிலை மலை போற்றி** யென, நீளத்தி னுனினைந்து நிற்பார்கள், .........அத்தனடி சேர்வார்க ளாங்கு.' என்றிருத்தலின், அந்தாதியும் இதுவும் ஒருவர் பாடியவேயென்று துணியப்படும். புராணங்கள் இவற்றை யாதரித்தல்போன்றே, இவற்றிலுள்ள சில பாகங்கள் புராண கதைகளை யாதரித்து நிற்கின்றன.

'சிறியேன் சொன்ன வறிவில் வாசகம்
வறிதெனக் கொள்ளா யாகல் வேண்டும்.'

(திருவெழுகூற்றிருக்கை)

'பணிந்தேனின் பாதம் பரமேட்டி பானீ
றணிந்தால வாயி லமர்ந்தாய்—தணிந்தென்மேல்
மெய்யெரிவு தீரப் பணித்தருளு வேதியனே
யையுறவொன் றின்றி யமர்ந்து.'

(ஷை இறுதி வெண்பா.)



'கூட லாலவாய்க் குழக னவ

தறியா தருந்தமிழ் பழித்தன னடியேன்
ஈண்டிய சிறப்பி னிணையடிக் கீழ்நின் று
வேண்டு மதுவினி வேண்டுவன் விரைந்தே.

(பெருந்தேவபாணி.)

'விரைந்தேன்மற் றெம்பெருமான் வேண்டியது வேண்டா
திகழ்ந்தேன் பிழைத்தே னடியேன்—விரைந்தென்மேற்
சீற்றத்தைத் தீர்த்தருளு தேவாதி தேவனே
யாற்றவுநீ செய்யு மருள்.'

(ஷை இறுதி வெண்பா)

என்பன காண்க.

தருமிக்குப் பொற்கிழி யளித்ததனைத் தேவாரமும், கல்லாடமும் சுட்டிக் கூறுகின்றன. அவற்றுட் கல்லாடம், 'அருந்தமிழ்க் கீரன் பெருந்தமிழ்ப் பனுவல், வாயிற் கேட்ட காவியங் களத்தினன்' என அக்கதை விரிவைப் புலப்படுத்துங் கூறுகின்றது. நம்பியாண்டார் நம்பிகள் இப்பிரபந்தங்களைப் பதினொராந் திருமுறையிற் றொகுத்து வைத்ததன்றி, நக்கீரர் முதலாயினோரைச் சிவனடியார்களெனவுங் கூறியிருக்கின்றனர். இங்ஙனம் பன்னூறாண்டுகளாகக் கொள்ளப்பட்டுவருதலே இவை நக்கீரர் வாக்கென்பதற்குப் பிரமாணமாகும்.

ஆயின், திருமுறைகளி னடைவை யெடுத்தோதிய உமாபதி சிவாசாரியாராதல், பிறராதல் இந்நூல்களைச்

சிறிதுஞ் சுட்டிக் கூறினர்களில்லை. நம்பியாண்டார் நம்பி
கள் காலத்தின் பின்னரும் சில பிரபந்தங்கள் பதினொராந்



திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ளன என்பதற் காதார
மிருக்கின்றது. ஆகலின், இவையெல்லாம் நம்பிகளா
லேயே திருமுறையிற் றொகுக்கப்பட்டன வென்று
ஒருதலையாகக் கூறவியலாது. எனினும், இவைகள் இற்
றைக்குப் பன்னூறாண்டுகளின் (நம்பிகள் காலத்தின்)
முன்னரே யியற்றப்பட்ட வாகுமெனக் கொள்ளுதல் நேரி
தாகும். சிவபிரானையும், சிவனடியாரையும் துதித்தல்
கருதிய இந்நூல்களில், சமயகுரவர்களான நால்வரைப்
பற்றியாதல், அவர்கள்பொருட்டு இறைவன் புரிந்த திரு
விளையாடல்களைப் பற்றியாதல், அவர்கள் காலத்தும், பிற்
காலத்துமிருந்த வடியார்களைப் பற்றியாதல் யாதுங் கூறப்
படவில்லை. பெரிதும் முற்காலத்தவர்களான கண்ணப்
பர், சண்டேசர், மார்க்கண்டர், உபமந்யு, அருச்சுனன்,
இராவணன், சலந்தரன் முதலியோரே கூறப்படுகின்ற
னர். இதுவே இந்நூல்களின் பழமைக்குத் தக்க சான்றா
கும். இவற்றின்கண், 'கற்கொண்டெறிந்த **சாக்கியன்**
அன்பு'ம், 'சீர்மலி சிலந்திக், கின்னரசளித்'ததும் கூறப்
படுதலை நோக்குழி, இவை கடைச்சங்க மழிந்து ஒன்
றிரண்டு நூற்றாண்டுக ளானபின் இயற்றப்பெற்றவையாகு
மெனக் கருதுதலும் கூடும். அவ்வாறாயின், இவையிற்றை
ஆக்கியோர் நக்கீரர் என்னும் பெயருடைய வேறு புலவ

ரெனக் கொள்ளவேண்டும். அங்ஙனம் கொள்ளின், கதைப் பொருத்தம் பலவுஞ் சிதைந்து சுவை குன்றுமாகலின் சங்கப்புலவராகிய நக்கீரனாரே இவற்றை ஆக்கியோர் என யாம் கொள்ளுதும்.

இனி, இந்நூல்க ளொவ்வொன்றையும்பற்றிச் சில குறிப்புக்களும், இவற்றின் சொற்பொருணயங்களை யுறிந்து கோடற்பொருட்டுச் சில யாட்டுக்களும், ஈண்டுத் தருதும்.

## நக்கீரர். 37

### கைலைபாதி காளத்திபாதித் திருவந்தாதி.

இது நேரிசை வெண்பா நூறுடையதாய்ச், சொற்றொடர் நிலையாய், இறுதிப்பாட்டி னிறுதிச்சீர் முதற்பாட்டின் முதற்சீராக மண்டலித்து முடியப் பெற்றுளது. இதன்கண் அகப்பொருட்டுறை யமைந்த பாடல்களும் உள. பல அரிய சொற்களும் உள்ளன. இந்நூன் முதற் செய்யுளாகிய 'சொல்லும் பொருளுமே' என்னும் வெண்பாவுடன், முதலாழ்வா ரிருவர் தத்தம் அந்தாதியின் முதலில் வைத்துள்ள 'வையந் தகளியா', 'அன்பே தகளியா' என்னும் வெண்பாக்கள் ஒப்புநோக்கத் தக்கவை. இந்நூலை 'ஐந்தெழுத்துஞ் சோராம லெப்பொழுதுஞ் சொல்' என நெஞ்சிற் கறிவுறுத்தி முடித்திருத்தலை நோக்குங்கால், இவ்வாசிரியர்க்குத் திரு வைந்தெழுத்தி னிடமுள்ள பேரன்பு வெளியாகின்றது.

'சொல்லும் பொருளுமே தூத்திரியு நெய்யுமா

நல்விடிஞ்சி லென்னுடைய நாவாகச்—சொல்லரிய
வெண்பா விளக்கா வியன்கயிலை மேலிருந்த
பெண்பாகர்க் கேற்றினேன் பெற்று.' (க)

'வாளா பொழுது கழிக்கின்றார் மானுடவர்
கேளார்கொ லந்தோ கிறிபட்டார்—கீளாடை
யண்ணற் கணுக்கராய்க் காளத்தி யுண்ணின்ற
கண்ணப்ப ராவார் கதை.' (கஉ)

மற்றும் பலபிதற்ற வேண்டா மடநெஞ்சே
கற்றைச் சடையண்ணல் காளத்தி—நெற்றிக்க
ணாரா வமுதின் றிருநாம மஞ்செழுத்துஞ்
சோராம லெப்பொழுதுஞ் சொல்.' (க00)

---

## 24 நக்கீரர்.

## திருவீங்கோய்மலை யெழுபது.

இது, சோழநாட்டிலுள்ள தேவாரம்பெற்ற திருப்பதிகளி லொன்றாகிய ஈங்கோய் மலையைச் சிறப்பித்து, 'இது சிவபிரான் விரும்பி யுறையும் மலை' யென்னும் பொருளில் ஒவ்வொரு பாட்டும் முடிந்துள்ள எழுபது நேரிசை வெண்பாவா னதியதொரு நூல். இந்நூலேயன்றி, எட்டுத்தொகையு ளொன்றாகிய பரிபாடலும், பின்னுள்ள ஏரெழுபது, சிலையெழுபது, ஈட்டியெழுபது என்பனவும் ஒரே தொகையுள்ள பாடல்களா னமைந்திருத்தலை நோக்குங்கால், எழுபதுபாட்டானும் நூலியற்றுதல் மரபு எனத் தெரிகிறது. இந்நூலில், மலையுறையுங் கானவர்களின்

செயலும், விலங்கு முதலிய கருப்பொருள்களி னியல்பும் அணிபெறக் கூறப்பட்டுள்ளன. பல அரிய சொற்களும் வந்துள்ளன. இதிற் பதினைந்து பாட்டுக்கள் இறந்து போயின.

'உண்டிருந்த தேனை யறுபதங்க ளூடிப்போய்ப்
பண்டிருந்த யாழ்முரலப் பைம்பொழில்வாய்க்—கண்
மாமயில்க ளாடி மருங்குவரு மீங்கோயே [டிருந்த
பூமயிலி தாதை பொருப்பு.' (க0)

'ஏன முழுத புழுதி யினமணியைக்
கானவர்தம் மக்கள் கனலென்னக்—கூன
லிறுக்கங் கதிர்வெதுப்பு மீங்கோயே நம்மேன்
மறுக்கங்க டீர்ப்பான் மலை.' (கச)

'கல்லாக் குரங்கு பளிங்கிற் கனிகாட்ட
வெல்லாக் குரங்கு முடனீண்டி—வல்லே
யிருந்துகிராற் கற்கிளைக்கு மீங்கோயே மேனிப்
பொருந்தவராப் பூண்டான் பொருப்பு.' (உக)

---

## நக்கீரர். 39

## திருவலஞ்சுழி மும்மணிக் கோவை.

இது, சோழ நாட்டிலுள்ள தேவாரப் பாடல்பெற்ற திருப்பதிகளி லொன்றாகிய திருவலஞ்சுழி யீசர்மீது பதினைந்து பாட்டுக்களாற் சொற்றொடர் நிலையாகப் பாடப்

பெற்றதொரு பிரபந்தம். மூவகை மணிகளைக் கோத்தாற்போன்று, ஆசிரியம், வெண்பா, கலித்துறையென்னும் மூவகைப் பாடலானும் தொடர்புறச் செய்திருத்தலின், இது மும்மணிக் கோவை யென்னும் பெயர்த்தாயிற்று. இதிலுள்ள பாட்டுக்களிற் பெரும்பாலன அகப்பொருட்டுறை யமைந்தவை. வேழம் வெகுளியை யெயிற்றிடை யடக்குமென இதிற் கூறப்பட்டிருக்கிறது.

'வணங்குதும் வாழி நெஞ்சே புணர்ந்துடன்
பொருகடன் முகந்து கருமுகிற் கணநற்
படவர வொடுங்க மின்னிக் குடவரைப்
பொழிந்து கொழித்திழி யருவி குணகடன்
மடுக்குங் காவிரி மடந்தை வார்புன
லுடுத்த மணிநீர் வலஞ்சுழி
யணிநீர்க் கொன்றை யண்ணல தடியே.' (க)

---

## திருவெழுகூற்றிருக்கை.

இஃது, ஒருவகை யெண்ணலங்காரம் படவரும் சித்திரச் செய்யுள். இயற்றமிழ்ப்பாவில் இஃதிணைக் குறளாசிரியப்பா வாகும். இஃது ஒரு செய்யுளே. திரு ஞான சம்பந்தமூர்த்திநாயனாரும், திருமங்கையாழ்வாரும் எழுகூற்றிருக்கை பாடியுள்ளார்கள்.

---

## பெருந் தேவபாணி.

இது, தனக்குப் பயனுண்டாகச் சிவபிரானை முன்னிலையாக வாழ்த்துகூறும் ஒரு பாட்டு. தேவபாணியாவது, தெய்வத்தை முன்னிலையாகப் பராவலுறும் பாட்டாகும். பெருமை தெய்வத்திற்கு அடை.

---

## கோபப் பிரசாதம்.

இது, பரமபதியாகிய சிவபெருமான், தீங்கியற்றுவாரை மறக்கருணையாற் றண்டித்தலும், நலம்புரிவாரை அறக்கருணையால் நல்வாழ்விலமர்வித்தலும் முறைமுறையெடுத்துக் கூறுவதோர் இணைக்குறளாசிரியப்பா வாகும். இதுபற்றியே இஃதிப்பெயர்த் தாயிற்று. 'கார்மலி யுருவக் கருடனைக் காய்ந்தும், ஆலின் கீழிருந் தறநெறி யருளியும், இன்னவை பிறவு மெங்க ளீசன், கோபப் பிரசாதங் கூறுங் காலை' என இந்நூலுள் வருவது காண்க. இதன் கண் வந்துள்ள,

> 'மாமுயல் விட்டுக் காக்கைப் பின்போம்'
> 'விளக்கங் கிருப்ப மின்மினி கவரும்'

என்னுந் தொடர்களோடு, திருநாவுக்கரையர் தேவாரத்தில் வந்துள்ள,

'முயல்விட்டுக் காக்கைப்பின் போன வாறே'
'விளக்கிருக்க மின்மினித்தீக் காய்ந்த வாறே'
என்னுந் தொடர்கள் ஒப்புநோக்கற் பாலன.

---

## நக்கீரர். 41

### காரெட்டு.

இஃது, எட்டு நேரிசை வெண்பாக்களினால் முகிலை வருணிப்பதொரு நூலாகும். இதில், சூற்கொண்டலின் கருமை, மின்னல் முதலியன இறைவனுடைய மணிமிடறு, செஞ்சடை முதலியவற்றோடு ஒப்பித்துக் கூறப்பட்டுள. இறைவன் திருவடிக்கண் அன்பு முதிரப்பெற்ற பெரியராயினார் உலகத் தோற்றங்களைக் காணும்வழி, அவற்றானெல்லாம் கடவுளி னருட்கோலமாகிய நினைந்துருகுவார் என்பதற்கு இஃது ஒரு சான்றாகும்.

'மையார் மணிமிடறு போற்கருகி மற்றவன்றன்
கையார் சிலைவிலகிக் காட்டிற்றே—யைவா
யழலரவம் பூண்டா னவிர்சடைபோன் மின்னிக்
கழலரவங் காண்புற்ற கார்.' (உ)

---

### போற்றித்திருக்கலி வெண்பா.

இது, போற்றி எனும் வாய்பாடுகொண்டு சங்கரனை வழுத்துவதொரு கலிவெண்பாவாகும். இதில் சைவபுராணக் கதைகள் பல குறிக்கப்பட்டுள.

'வானவர்க டாங்கூடி மந்திரித்த மந்திரத்தை
மேனவில வோடி விதிர்விதிர்த்துத்—தானவருக்
கொட்டிக் குறளை யுரைத்த வயன்சிரத்தை
வெட்டிச்சிரித்த விறல் போற்றி'

எனக் கூறப்பட்டுளது.

'குறுத்தாள்', 'போகட்டு' என்ற ஆட்சிகள் இதி லுள்ளன்.

---

42 **நக்கீரர்.**

**திருக் கண்ணப்பதேவர் திருமறம்.**

இது, திருத்தொண்டர் புராணத்துக் கூறப்பட்ட அரும் பெருந் தொண்டுசெய்த நாயன்மார்களி லொருவரும், 'கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை கண்டபின்' எனத் திருவாதவூ ரடிகளாலும் அன்பிற்கு மேலெல்லையாக வைத்துப் பாராட்டப் பெற்றவரும், இங்ஙனமே ஏனைச் சமயகுரவராலும், சங்கராசாரியர், பட்டினத்தடிகள் முதலிய பெரியோர் பலராலும் தோத்தரிக்கப் பெற்றவருமாகிய கண்ணப்ப நாயனாரது சரிதத்தைச் சுருங்க, விளங்க வெடுத்துரைக்கும் ஓர் அகவற்பா வாகும். மறம் என்பது வேட்டுவரது வீரத்தைக் குறிக்கும் பாட்டிற்கு ஆகுபெயர். இங்கு, வீரமாவது, காட்டு விலங்குகளை வேட்டம் புரியுமது வன்றி, உலகியலைக் கீழ்ப்படுத்துத், தற்போதத்தை யறவெறிந்து, 'நாளாறிற் கண்ணிடந் தப்பவல்லலே னல்லேன்' என்று கூறுமாறு செயற்கருஞ் செயல் புரிந்து, சிவானந்த மதுவுண்டு தருக்கும் பெருவீரமாகலின், அது திருமறம் எனப்பட்டது. இது, சொன்னயம்,

பொருணயங்களின் மிகச்சிறந்து விளங்குவது. கண்ணப்ப ரது சரித்திர வழுதைத் தமிழக மூழுது முண்டு களிக்கு மாறு விரித்துரைப்பான் புக்க சேக்கிழார் குரிசிலுக்கு அருங்கருத்துக்களை யொருங்குதவிய பெருஞ் சிறப்புடை யது. கல்லாடதேவ நாயனு ரருளிச்செய்த திருக்கண் ணப்பதேவர் திருமறம் ஒன்றும் இதனை யடுத்துப் பதினொராந் திருமுறையி லுள்ளது. இரண்டும் படித் தின்புறற் பாலன.

> 'தத்தையாந் தாய்தந்தை நாகனுந் தன்பிறப்புப்
> பொத்தப்பி நாட்டுடுப்பூர் வேடுவனுந்—தித்திக்குந்
> திண்ணப்ப னுஞ்சிறுபேர் செய்தவத்தாற் காளத்திக்
> கண்ணப்ப னுய்நின்றுன் காண்.' (இறுதி வெண்பா.)

---

## நான்காம் அதிகாரம்.

---

## களவியலுரை யாராய்ச்சி.

இற்றைநாள் வரை நமக்குக் கிடைத்துள்ள தமிழ் நாலுரைகளுள் களவியலுரையானது மிக்க திட்ப நுட்பமமைந்த சிரியவுரையாகும். தொன்மையுடையது மாகும். தமிழ்நாட்டு முச்சங்கங்களின் வரலாற்றை விரி வாக முதன்முத லுணர்த்துவது இவ்வுரையே யாகும். இரு மொழிக்கு முதற் குரவராகச் சொல்லப்படுந் தழற் புரை சுடர்க்கடவுளே தந்த திவ்வகப்பொருணூலெனின், இதற்குரைகண்டார் தொல்கேள்வித் துறைமுற்றிய நல்

விசைப் புலவரெனின், இவ்வுரைதான் செந்தமிழ்க் கடவுளாய செவ்வேள் கேட்டுவந்ததெனின், முச்சங்கவரலாறாகிய பழம்பொருளை நமக்கெச்சமெனத் தேடிவைத்த இவ்வுரையே யெனின், இது நம்மனோரால் எத்துணைப் போற்றத்தக்கது! சிந்தித்திடுமின். இவ்வுரையுட் பாயிரமாகக் கூறிவரும் பகுதியில், கேட்போரை யுணர்த்துமிடத்து, முச்சங்கவரலாறு கூறிப் பின் களவியல்வரலாறும், உரைவரலாறும் கூறப்பட்டுள. அவற்றுள், இந்நூல் உரைகளின் வரலாறு அடியில் வருமாறு காண்க. (இது வேயிடமாக உரையின் போக்கினையு முணர்ந்துகொள்ளுமாறு புத்தகத்திலுள்ளபடியே யிங்கெழுதப்படுகிறது.)

“அக்காலத்துப் பாண்டியனாடு பன்னிருயாண்டு வற்கடஞ் சென்றது. செல்லவே, பசி கடுகுதலும் அரசன் சிட்டரையெல்லாங் கூவி, ‘வம்மின், யான் உங்களைப்



புறந்தரகில்லேன்! என்தேயம் பெரிதும் வருந்துகின்றது. நீயிர் நுமக்கறிந்தவாறு புக்கு, நாடுநாடாயின ஞான்று என்னை யுள்ளிவம்மின்.’ என்றான். என, அரசனைவிடுத்து எல்லாரும் போயினபின்றைக் கணக்கின்றிப் பன்னீரியாண்டு கழிந்தது. கழிந்தபின்னர், நாடுமலிய மழை பெய்தது. பெய்தபின், அரசன் இனி நாடு நாடாயிற்றாகலின் நூல்வல்லாரைக் கொணர்கவென்று எல்லாப் பக்கமும் போக்க, எழுத்ததிகாரமுஞ், சொல்லதிகாரமும், யாப்பதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்து, பொருளதிகாரம் வல்லாரை எங்குந் தலைப்பட்டிலே

மென்றுவந்தார். வர, அரசனும் புடைபடக் கவன்று, 'என்னை? எழுத்துஞ், சொல்லும், யாப்பும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே! பொருளதிகாரம் பெறேமேயெனின், இவை பெற்றும் பெற்றிலேம்.' எனச் சொல்லாநிற்ப; மதுரை ஆலவாயின் அழனிறக் கடவுள் சிந்திப்பான்: 'என்னை! பாவம்! அரசற்குக் கவற்சி பெரிதாயிற்று. அதுதானும் ஞானத்திடையதா கலான் யாம் அதனைத் தீர்க்கற்பாலம்.' என்று, இவ் வறுபது சூத்திரத்தையுஞ் செய்து, மூன்று செப்பிதழ கத் தெழுதிப் பீடத்தின் கீழிட்டான்.

"இட்ட பிற்றைஞான்று, தேவர்குலம் வழிபடுவான், தேவகோட்டத்தை எங்குந் துடைத்து, நீர் தெளித்து, பூவிட்டு, பீடத்தின்கீழ் என்று மலகிடான் அன்று தெய் வத் தவக்குறிப்பினுன் அலகிடுவனென்று உள்ளங்குளிர அலகிட்டான். இட்டாற்கு அலகினோடும் இதழ்போந் தன. போதர, கொண்டுபோந்து நோக்கினுற்கு வாய்ப் புடைத்தாயிற்றோர் பொருளதிகாரமாய்க் காட்டிற்று. காட்ட, பிராமணன் சிந்திப்பான்: 'அரசன் பொருளதிகா ரம் இன்மையிற் கவல்கின்றானென்பது கேட்டுச் செல்லா



நின்றதுணர்ந்து நம்பெருமான் அருளிச்செய்தானாகும்.' என்று, தன் அகம் புகுதாதே கோயிற்றலைக்கடைச் சென்று நின்று, கடைகாப்பார்க்குணர்த்த, கடைகாப்பார்

அரசற் குணர்த்த, அரசன் புகுதுகவென்று பிராமண னைக் கூவ, சென்றுபுக்குக் காட்ட, ஏற்றுக்கொண்டு நோக்கி, 'பொருளதிகாரம், இது நம்பெருமான் நமதிடுக் கண் கண்டு அருளிச் செய்தானாகற்பாலது.' என்று, அத் திசை நோக்கித் தொழுதுகொண்டு நின்று, சங்கத்தா ரைக் கூவுவித்து, 'நம்பெருமான் நமது இடுக்கண் கண்டு அருளிச் செய்த பொருளதிகாரம்; இதனைக் கொண்டு போய்ப் பொருள்காண்மின்.' என, அவர்கள், அதனைக் கொண்டுபோந்து, கனமாப்பலகை ஏறியிருந்தாராய்வுழி, எல்லாருந் தாந்தாம் உரைத்த உரையே நல்லதென்று சிலநாளெல்லாஞ் சென்றன. செல்ல, நாம் இங்ஙனம் எத்துணையுரைப்பினும் ஒருதலைப்படாது; நாம் அரச னுழைச் சென்று நமக்கோர் காரணிகனைத் தரல்வேண்டு மென்று, கொண்டுபோந்து, அவனாற் பொருளெனப் பட்டது பொருளாய், அன்றெனப்பட்டது அன்றாய் ஒழி யக் காண்டுமென, எல்லாரும் ஒருப்பட்டு அரசனுழைச் சென்றார். அரசனும், எதிர்சென்று, 'என்னை? நூலுக் குப் பொருள் கண்டீரோ?' என, 'அஃது காணுமாறு எமக்கோர் காரணிகனைத் தரல்வேண்டும்.' என, 'போ மின், நுமக்கோர் காரணிகனை எங்ஙனம் நாடுவேன்? நீயிர் நாற்பத்தொன்பதின்மராயிற்று; நுமக்கு நிகரா வார் ஒருவர் இம்மையினின்றே.' என்று அரசன் சொல்ல, போந்து கனமாப் பலகையின் ஏறியிருந்து, அரசனும் இது சொல்லினான்: 'காரணிகனைப் பெறுமாறு என்னை கொலென்று சிந்திப்புழி, சூத்திரஞ் செய்தான் ஆலவா யில் அவிர்சடைக் கடவுளன்றே! அவனையே காரணி

கனைத் தரல்வேண்டுமென்று சென்று வரங் கிடத்து' மென்று வரங் கிடப்ப; இடையாமத்து, 'இவ்வூர் உப் பூரிகுடிகிழார் மகனுவான் உருத்திரசன்மனென்பான், பைங்கண்ணன், புன்மயிரன், ஐயாட்டைப்பிராயத்தான், ஒரு மூங்கைப்பிள்ளை உளன்; அவனை அன்னனென்றிக ழாது, கொண்டுபோந்து, ஆசனமேலிரீஇக், கீழிருந்து, சூத்திரப் பொருளுரைத்தால், கண்ணீர் வார்ந்து, மெய்ம் மயிர் சிலிர்க்கும் மெய்யாயின உரை கேட்டவிடத்து; மெய்யல்லா உரை கேட்டவிடத்து வாளா இருக்கும்; அவன் குமாரதெய்வம்; அங்கோர் சாபத்தினற் றோன்றி ஞன்.' என முக்காலிசைத்த குரல் எல்லார்க்கும் உடன் பாடாயிற்முக, எழுந்திருந்து தேவர் குலத்தை வலங் கொண்டுபோந்து, உப்பூரிகுடிகிழாருழைச் சங்கமெல் லாஞ்சென்று, இவ்வார்த்தையெல்லாஞ் சொல்லி, ஐயனு வான் உருத்திரசன்மனைத் தரல்வேண்டுமென்று வேண்டி, கொடுபோந்து, வெளியது உடீஇ, வெண்பூச்சூட்டி, வெண் சாந்தணிந்து, கனமாப்பலகையேற்றி, கீழிருந்து சூத்தி ரப் பொருளுரைப்ப, எல்லாரும் முறையே உரைக்கக் கேட்டு வாளா இருந்து, மதுரை மருதனிளநாகனுர் உரைத்தவிடத்து ஒரோவிடத்துக் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் நிறுத்தி, பின்னர்க் கணக்காயனர் மகனர் நக்கீரர் உரைத்தவிடத்துப் பதந்தொறுங் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்ப்ப இருந்தான். இருப்ப,

ஆர்ப்பெடுத்து மெய்யுரை பெற்றாம் இந்நூற்கென்றார்."

இதற்கும் பழைய திருவிளையாடலுக்குமுள்ள வேறுபாடு கண்டுணர்க. இறையனார் ஏனைய புலவர்களுடன் வீற்றிருந்து தமிழாராயுங்கால், பொருணூல் அருளிச்செய்தார் என அது கூறுகின்றது. கல்லாடம், ‘உலகியனிறுத்தும் பொருண்மரபொடுங்க, மாறனும்



புலவரும் மயங்குறுகாலை......அன்பினைந் திணையென்றறுபது சூத்திரம்......தெளிதரக்கொடுத்த தென்றமிழ்க் கடவுள்.’ என்று கூறுவது இவ்வுரையுடன் கருத்தொருமை யுறுவதாகத் தோன்றுகிறது. மற்றும் அது, நக்கீரர், கபிலர், பரணர் இம்மூவருரையும் கேட்டபொழுது உருத்திரசன்மர் மெய்புளகுற்றுக் கண்ணீர் விடுத்து நின்றனர்; புலவரெல்லாம் இம்மூவருரையும் மெய்யுரையெனக் கொண்டனர்.’ ‘என்று கூறுகிறது. கபிலர், பரணர் இருவரும் நக்கீரரொப்பவே முதன்மையுடைய புலவர்கள். குணவொழுக்கங்களில் மிக மேம்பட்டவர்கள். கபிலர், அக்காலத்துப் புலவரும், அரசரும் புகழும் பெருஞ் சிறப்புடையவராய் விளங்கியவர். நக்கீரர்தாமும், ‘உலகுடன் றிரிதரும் பலர் புகழ் நல்லிசை, வாய்மொழிக்கபிலன்’ என்று அவரை அகப்பாட்டினுள் மிகப் பாராட்டினர். அத்தகு புலவரிருவரும் அப்பொழுதிருந்து அகப்பொருளுக் குரை கூறினாராயின், அவர்களுரையும் மெய்யுரையாகப் போற்றப் பட்டிருக்கவே வேண்டும். இவ்வுரை வரலாறாவது,

பின்வந்த உரையாளர்களாவது கபிலரும் பரணரும் உரை கூறினரெனச் சிறிதும் கூறாமையின், அவர்கள் அப்பொழுது இருந்திலரென்பது தேற்றம். ‘இறையோன் பொருட்குப் பரணர் முதல் கேட்ப’ என்று கூறுதலின், கபிலர் அப்பொழுது இலராயினாரென்பது கல்லாடர்க்குங் கருத்தாதல் பெறப்படும். இங்ஙனம் சரிதத்தொடு பொருந்தாதன புராணங்களிற் காணப்படுமேல், அவற்றைப் பிரித்துணர்தலே விவேகமாகும்; ‘எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருண், மெய்ப்பொருள் காண்ப தறிவு.’ என்பவாகலின். நக்கீரர்க்கு இலக்கணம் உபதேசித்தது முதலியவும் இங்ங



னம் ஓர்ந்துணர்க. செய்யுளாயினவெல்லாம் பிரமாணமும், உரையாயினவெல்லாம் அப்பிரமாணமும் ஆகா என்க.

இனி, இவ்வுரை யெழுதினார் நக்கீரர் அல்லர்; பிற்காலத்தொருவர்; என்று கொள்ளுமாறு, சில குறிப்புக்கள் காணப்படுகின்றன. அவை, ‘அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது ஆயிரத்தெண்ணூற்றைம்பதிற்றியாண்டென்ப.’, ‘உக்கிரப் பெருவழுதி யீறாக நாற்பத்தொன்பதின்மரென்ப.’ என்று கடைச் சங்கத்திறுதியை அறுதியிட்டுரைத்தலும்; ‘அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தரமதுரை யென்ப.’ என்றிவ்வாறு, நேரிலறியார் போன்று கூறலும்; ‘கணக்காயனார் மகனார் நக்கீரர்

உரைத்தவிடத்து' என்று படர்க்கையாற் கூறுதலும்; 'அதனல், உப்பூரிகுடிகிழார் மகனுவான் உருத்திர சன்மன் செய்தது இந்நூற்குரை யென்பாருமுளர்; அவர் செய்திலர், மெய்யுரை கேட்டாரென்க.' என்று இஃதெழுதிய காலத்திற்றனே உரை கண்டாரைப்பற்றி ஐயப்பாடிருந்தமை தோன்றக் கூறுதலும்; 'இனி உரை நடந்துவந்தவாறு சொல்லுதும். மதுரைக் கணக்காயனர் மகனர் நக்கீரனர் தம்மகனர் கீரங்கொற்றனர்க் குரைத்தார்; அவர் தேனூர்கிழார்க் குரைத்தார்.' என்று தொடங்கி, 'முசிறியாசிரியர் நீலகண்டனர்' வரை ஒன்பது வழிமுறை கூறுதலும்; 'காரணமென்பது அக்காலத்துப் பாண்டியனுஞ் சங்கத்தாரும் பொருளிலக்கணம் பெறுது இடர்ப்படுவாரைக்கண்டு ஆலவாயிற் பெருமானடிகளால் வெளிப்படுக்கப்பட்டது.' என்று சென்ற காலந்தோன்றக் கூறுதலும்; பிற்காலத்தரசர்களாகக் கருதப்படுமவரைப்பற்றிய பாட்டுக்கள் மேற்கோளாக வந்திருத்தலும் ஆகும். மற்றும், உரை



கண்டாரே உரைவரலாறு கூறினரெனலும் பொருத்தமின்றும். இங்குக் காட்டிய வுரைப் பகுதியெல்லாம் புறவுரையாக இருத்தலின், நூலுரை யெழுதினர் நக்கீரனரும், பாயிரம் எழுதினர் பிற்காலத்தொருவரும் ஆவரெனக் கொள்வேமெனின், கொள்ளுதலமையாது. என்னை? 'இனி, நூல் நுதலிய நூஉம் உரைக்கற்பாலது;

அது பாயிரத்துள்ளே உரைத்தாம்.' என்றும்; 'இக் களவு சிறப்புடைத்து: சுவர்க்கம் வீடுபேறுகளை முடிக் குமாகலான், எனப்படுவதென்று சொல்லிச் சிறப்பிக்கப் பட்டது. அது பாயிரத்துள்ளும் உரைத்தாம்.' என் றும் இவ்வுரை கூறுதலிற் பாயிரத்தோடும் உரையெழு திஞர் ஒருவரேயென்பது பெறப்படுமாகலின் என்க. இங்ஙனமே மேற்கோள்கள் மாத்திரம் பிற்காலத்தொரு வர் புகுத்தினர் எனலும் அமையாது; அப்பாடல்களின் பொருள் ஓரோவழி உரையிலும் விரவிவருதலின் என்க.

இவ்வேதுக்களானே களவியற் பொருள்கண்டார் நக்கீரரல்லர் எனக் கொள்வாமெனின், அது பொருந்தாது. அவரே என்று அடிப்பட்ட சான்றோர் வழக்குள்ளது. 'வினையினீங்கி' என்னும் மரபியற் சூத்திரவுரையில், 'கடைச் சங்கத்தாருட் களவியற் பொருள்கண்ட கணக்காயனர் மகனர் நக்கீரனர், இடைச் சங்கத்தார்க்கும் கடைச்சங்கத்தார்க்கும் நூலாயிற்றுத் தொல்காப்பியம் என்றூர்.' எனப்பேராசிரியர் கூறி னர். சிலப்பதிகாரத்து வேனிற்காதை முதற்கண், 'கணக் காயனர் மகனர் நக்கீரனருரைத்த இறையனர் பொரு ளுரை' என்று அடியார்க்குநல்லார் கூறினர். 'திணை மயக்குறுதலும்' என்னும் அகத்திணையியற் சூத்திரவுரை யில், 'இக்கருத்தானே நக்கீரரும் ஐந்திணையுள்ளுங் கள வுநிகழுமென்று கொண்டவாறுணர்க.' என்று நச்சினர்க்

கினியர் கூறினர். களவியலுரைப்பாயிரமே இவ்வுரை கண்டார் நக்கீரரே என வற்புறுத்துக் கூறுகிறது. இவ்வுரையியற்றினர் பிறரொருவராயின், அவர், நக்கீரரியற்றினர் எனக் கூறுதற்குக் காரணந்தான் என்னே? காரணமின்றியே கூறினர் என்னினும், நாம் முன்பு காட்டிய தடைகளை அவர் உணர்ந்திலராவரோ? அவர் அத்துணை எளியரல்லர். இவ்வாற்றான் நாம் அறியக்கிடப்பதென்னையெனின், களவியற்பொருள் கண்டார் கணக்காயனார் மகனார் நக்கீரனாரே; அவ்வுரை பலரானும் கேட்கப்பட்டு வர, அவருள் ஒருவரால் இங்ஙனம் எழுதப்பட்டது; அவர், தாம் கேட்டவற்றோடு மேற்கோள்களும் சேர்த்துக்கொண்டாராவர்; உரைவரலாறும் தாம் கேட்டபடி அவர் எழுதினாராவர்; தாம் எழுதினும், அவ்வுரைப் பொருளில் தமக்குச் சிறிதேனும் உரிமையுண்டென்று கருதினாரல்லர்; என்பது. இன்னணம் பின்னுளோரொருவர் எழுதிய காரணத்தால் முன்னையுரை சிறுபான்மை குறைந்தும், திரிந்து மிருத்த லியல்பே. இது நிற்க, இவ்வுரையெழுதினார் முசிறியாசிரியர் நீலகண்டனார் எனச் சிலரும், இளம்பூரணவடிகள் எனச் சிலரும் துணிந்தனர். தக்க ஆதாரமின்றியே அங்ஙனம் துணிதல் ஏதமாகும்.

இனி, 'பொருளதிகாரம் வல்லாரை எங்குந் தலைப்பட்டிலேம்' என்பதுகொண்டு அக்காலத்துத் தொல்காப்பியப் பொருளதிகாரம் இருந்ததின்றென்றுவது, அது கற்றார் இலரென்றுவது கொள்ளுதல் அமை

யாது. இவ்வுரைதானே, தொல்காப்பியத்தை இடைச்
சங்கத்தார்க்கும் கடைச்சங்கத்தார்க்கும் நூல் என்று
கூறுகிறது. தொல்காப்பியச் சூத்திரங்களைப் பலவிடத்
தும் எடுத்தாளுகிறது. அகத்தியம் முதலாயினவும்



அக்காலத்து இருந்தனவாகும். பொருட்பயிற்சி குன்றிய
காரணத்தால், தொன்னூல்களில் பரந்துபட்டுக் கிடக்கும்
பொருளிலக்கணங்களை வழுவின்றித் தொகுத் துரைக்க
வல்லார் அரியராயினர் என்பதே கருத்தாகும். பொரு
ளுள்ளும் அகப்பொருளே விரிந்ததாகலின் அதனைத்
தொகுத்துணர்த்துதல் இன்றியமையாதாயிற்று. இறை
யனார் களவியலும் அகப்பொருளுணர்ச்சிக்குக் கட்டளை
மாத்திரமாக இயற்றப்பெற்றதென்க. பொருளதிகாரம்
வல்லார் இலர் என்றதுகொண்டும், களவியலுரை ஒருவர்
பின் ஒருவராகக் கேட்கப்பட்டு வந்தது என்றதுகொண்
டும், கடைச்சங்க நாளில் தமிழில் எழுதும் வழக்கம்
இன்றென்று கொள்ளற்க. அக்காலத்தும், அதற்கு
முற்பட்ட காலத்தும் தமிழில் எழுத்து வழக்கம் உண்
டென்பதற்குப் பலசான்றுகள் உள்ளன. எழுதுந்
தொழில்பற்றி எழுத்தாளன் என்று பெயருற்றாரும்
உளர். எனினும், ஆசிரியர்பாற் கேட்டு நூல் பயிலுதலே
மரபாம் என்க. இவ்வுரையினின்றும், சிலப்பதிகார மணி
மேகலைகளினின்றும் நாம் கருதலுறுவது, மதுரையிற்
கோவலன் கொலையுண்ண, நெடுஞ்செழியன் உயிர்துறப்

பக், கோப்பெருந்தேவி தீப்பாய, மதுரையும் எரியுண்ட
அல்லற் காலையில் இளஞ்செழியன் பட்ட மெய்தினன்;
அக்காலத்து வானமும் பொய்த்து வற்கடமும் மிக்கமை
யின், தமிழ்ச் சங்கம் நடத்தவில்லையாகப் புலவரெல்லாம்
பிரிந்து சென்றனர்; சில ஆண்டுகள் சென்றபின் மறித்
தும் சங்கம் கூடிற்று; என்பது.

இனி, இவ்வுரையானது,

> 'அன்பி னைந்திணைக் களவெனப் படுவ
> தந்தண ரருமறை மன்ற லெட்டினுட்
> கந்தருவ வழக்க மென்மனார் புலவர்.'



என்னும் முதற் சூத்திரத்துக்கும், இரண்டாஞ் சூத்திரத்
துக்கும் விரிவாகவும், ஏனைய சூத்திரங்கட்குச் சிறிது
சுருக்கமாகவும் அமைந்துளது. இரண்டாஞ்சூத்திரவுரை
மிக்க நுட்பமுடையதாய், கற்றோர்க்குக் கழிபேருவகை
பயக்குஞ் சிறப்பினதாய் நிலவுகின்றது. அஃது, உலகத்
தில் எம்மொழியினுமுள்ள சிறந்த உரைகளுடன் ஒட்டி
முன்னிற்கும் ஒட்பம் உடையது என்னலாம்.

இவ்வுரை, "ஐந்து தலையுடைய நாகத்தை ஐந்தலை
நாகமும் என்ப; ஐந்து தலை நாகமும் என்ப; இருமுடிபு
டைத்து. என்னை? குற்றியலுகரப் புணரியலுள், 'முத
னிலை...புலவர்' என்றாராகலின்." என ஒரோவழி எழுத்
தின் செய்கையை விளக்கியும்; 'மூன்றாம் வேற்றுமை
காரண காரியத்தை வேறுணரவு நிற்கும்; வேறன்றி யுண

ரவு நிற்கும்.' எனவும், 'ஒரு சொன்முன் ஒரு சொல் வருங்கால் பயனிலை வகையானும், தொகைநிலை வகையானும், எண்ணு நிலை வகையானும் என மூன்றனுள் ஒன்று பற்றியன்றே வருவது?' எனவும் சொல்லின் பெற்றியை விளக்கியும்; 'உலகத்துப் பொருள்தான் இரண்டு வகையான் உணரப்படும்; உண்மை மாத்திரை உணர்த்திப் பிழம்பு உணர்த்தப்படாதனவும், உண்மையும் பிழம்பும் உணர்த்தப்படுவனவும் என.' எனப் பொருட்டன்மை விளக்கியும்; 'போறவென்பது சிறிதொத்துச் சிறிதொவ்வாதொழிவது; என்னை? குவளைப் பூப்போலுங் கண் என்றால், நீல மாத்திரையொக்கும்; மற்றெவ்வாப் புடை பெரிது.' என உவம வியல்பு விளக்கியும்; 'பல காரணத்தினைய பொருளை ஒரு காரணத்தினாற் சொல்லுவது சிறப்புடைமை நோக்கி; என்னை? நிலனும் நீரும் காலமும் வித்துமென இவற்றினது கூட்டத்தினைய முளையை நென்முளையென்ப. நென்முளைக்கு நெல் சிறப்புடைக்



காரணம்; நிலனும் நீரும் முதலாகவுடையன பொதுக்கார

ணம்; அவை பயற்று முளை முதலாவுடையனவற்றுக்கும காரணமாகலான்.' எனக் காரண பேதங்களை விளக்கி யும் செல்லா நிற்பது. "இனி, 'என்மனார் புலவர்' என் பது, 'என்ப' என்னும் முற்றுச்சொற் குறைக்கும் வழிக் குறைக்க வென்பதனும் பகரங்குறைத்து, விரிக்கும் வழி விரித்தல் என்பதனல் 'மன்', 'ஆர்' என்பன இரண்டி டைச்சொற் பெய்து விரித்து, 'என்மனார் புலவர்' என்று யிற்று." எனச் சிறுபான்மை சொல்லாக்கமும் ஆராய் வது.

இவ்வுரையில் இடத்துக்கேற்பப் பல அழகிய உவ மைகள் காட்டப்பட்டுள. அவற்றுட் சில வருமாறு:— 1. ஆவிற்கு இருகோடுபோல; 2. புனலோடுவழிப் புற்சாய்ந்தாற்போல; 3. வேலேறுபடத் தேளேறு மாய் ந்தாற்போல; 4. கண்ணுடி மண்டிலத்து ஊது ஆவி போல; 5. சந்தனமும் காஞ்சிரையும் மரமெனப்பட்டது போல; 6. நாண்வழிக் காசுபோல; 7. நீர்வழி மிதவை போல; 8. பள்ளத்துவழி வெள்ளம்போல; 9. குன்ற முருண்டாற் குன்றி வழியடை யாகாவாறுபோல; 10. கடல்வெதும்பின் வளாவு நீரில்லதுபோல; என்பன.

இஃது, உலகத்தார் மனோபாவங்களையும் ஏற்புழிக் கூறிச் செல்கின்றது. பின்வருமாறு காண்க.

'இனியாரோடு தலைப்பெய்த இடங்கண்டாலும் அவ்வினியாரைக் கண்டாலேபோல்வது உலகத்துத் தன்மை.'

'உலகத்தோர் இடுக்கணுற்றால் விதியானே தீரு மென்றிரார்; முன்னே தீர்த்தற்குச் சுற்றத்தாணையும், நட்டாரையும் நினைப்பர்.'

**54 நக்கீரர்.**

'ஆரறிவார்? சிறியாராற் பெரியார் முடிக்குங் கருமங்களு முள.'

'உலகத்து ஒருபொருண் முடியாதெனக் கவன்று நின்றார் முடிப்பதோர் உபாயங்கண்ட ஞான்று அப்பொருள் எய்தினாரேபோல மகிழ்வர்.'

இனி, ஏனைநூல் உரைகட்கும் இதற்குமுள்ள ஒற்றுமை வேற்றுமையுட் சில காட்டுதும்.

ஆசிரியர் தொல்காப்பியனார், முதனூல், வழிநூல் என நூல் இருவகைப்படுமென்று கொண்டு; அவற்றுக் கிலக்கணங் கூறினர். பின்வந்த நூலாசிரியர் சிலர் அவற்றொடு சார்புநூல் என்பதொன்றுகொண்டு நூல் மூன்று என்றனர். இவ்வுரையானது அவற்றொடு 'எதிர்நூல் என்பதும் ஒன்று உண்டு' எனக் கூறி, 'தன்கோ ணிறீஇப் பிறன்கோண்மறுப்ப தெதிர்நூலென்ப ரொருசாராரே.' என்னுஞ் சூத்திரத்தை மேற்கோளாகக் காட்டுகிறது.

'தமிழ் நான்குவகைப்படும்; எழுத்தும், சொல்லும், பொருளும், யாப்பும் என.' என்பது இவ்வுரை. தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் என மூன்று அதிகாரமாக வகுக்கப்பட்டது. யாப்பு ஓர் அதிகாரமாகக் கொள்ளப்பட்டிலது. செய்யுளியல் முதற் சூத்திர வுரை

யில், 'மற்றிதனை யாப்பதிகாரமென வேறோரதிகார மாக்கி யுரைப்பாருமுளர்; அங்ஙனங்கூறின் வழக்கதிகார மெனவும் வேறு வேண்டுமென மறுக்க.' என்று பேராசிரியர் கூறினர். பின்னுளோர் அணியையுங் கூட்டி, இலக்கணம் ஐந்து என்பாராயினர். அணியிலக்கணம் என ஒன்று கோடல் மிகையாதென்று, 'நிரனிறுத்தமைத்த' என்னும் உவமவியற் சூத்திரவுரையில் பரக்கக் கூறப்பட்டுளது.



இவ்வுரையில் மாலை, யாமம், வைகறை, எற்பாடு, நண்பகல் எனச் சிறுபொழுது ஐந்து கூறப்பட்டன. நச்சினார்க்கினியர், அகத்திணையியலுரையில் 'வைகுறுவிடியல்' என்பதனை, 'வைகுறுவும் விடியலும்' என இரண்டாகக் கொண்டும், எற்பாட்டினைப் பிற்பகல் எனக்கொண்டும் சிறுபொழுது ஆறு என்றார். சிவஞான முனிவர், சிறுபொழுது ஐந்தேயாமெனச் சாதித்து, எற்பாட்டினை ஞாயிறு தோன்றுங்காலை என்று சூத்திர விருத்தியுட் கூறினர்.

பசுப்போலவானைப் பசுவென்றலும், பாவைபோல்வாளைப் பாவையென்றலும் உவமந்தொகுத்தவாறு என இவ்வுரை கூறுநிற்கும். சேனாவரையர் முதலாயினரெல்லாம் பாவை முதலாயின ஆகுபெயரெனக்கொண்டனர்.

'யாப்பு' என்பது தொகுத்தல் முதலிய நூல்யாப்பு என்றும், 'கேட்போர்' என்பது நூலரங்கேறும் அவைக் களத்துக் கேட்டோரென்றும் இவ்வுரை கூறிற்று. பின் வந்த உரையாளர்களும் அவ்வாறே கூறினர். சிவஞான முனிவர் அக்கொள்கையை மறுத்து வேறு பொருள் கூறினர்.

'என்மனார்' என்னுஞ் சொன்முடிபுபற்றி இவ்வுரை கூறுவதும், சேனாவரையர் முதலியோர் கூறுவதும் மாறுபாடுடையன.

அகப்பொருள் நாற்பத்து மூன்றாஞ் சூத்திரத்து, மூன்றுநாள் சொற்கேட்கும் வழி யுறைதலும், ஒன்பது நாள் கூடியுறைதலும் கூறுகின்றது இவ்வுரை. கற்பியல்

நாற்பத்தாறாஞ் சூத்திரத்து, மூன்று நாளும் பன்னிரண்டு நாளும் என்றும், மூன்றுநாளும் ஒன்பது



நாளுங் கூறுவாரும் உளர் என்றும் நச்சினார்க்கினியர் கூறினர். 'நீராடியபின் னீராறுநாளும்' என்று அகப் பொருள் விளக்கம் கூறுகின்றது.

'திணையே கைகோள்' என்னுங் களவியற் சூத்திர வுரையில் விற்பூட்டு, விதலையாப்பு, கொண்டுகூட்டு, பாசி நீக்கு, ஒரு சிறைநிலை எனப் பொருள்கோள் ஐந்தென்று

கூறி, 'விற்பூட்டென்பது தலையுங் கடையும் பொருள் கொள்வது; விதலையாப்பென்பது முதலும் இடையுங் கடையும் பொருள்கொள்வது; பாசிநீக்கமென்பது சொற்றோறும் அடிதோறும் பொருளேற்று நிற்பது; கொண்டு கூட்டென்பது பொருள்களைக்கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளுமாறறிந்துகொள்வது; ஒரு சிறைநிலையென்பது ஒரு பாட்டினகத்துச் சொல்லப்பட்ட பொருள் ஒருவழி நிற்பது.' என அவற்றுக்கிலக்கணமும் கூறப்பட்டுளது. அதனையடுத்த சூத்திரம் பொருள்கோளின்றியும் பாட்டு வருமெனக் கூறுகின்றது. நிரனிறை, சுண்ணம், அடிமறி, மொழிமாற்று என நான்கு பொருள்கோள் கூறினர் தொல்காப்பியனார். 'அகன்று பொருள் கிடப்பினும்' என்னுஞ் செய்யுளியற் சூத்திரவுரையில், 'மாட்டு' என்பதுபற்றி, 'இதுவும் நால்வகைப் பொருள்கோளன்றி வேறு புலவரது செய்கை' என்றார் பேராசிரியர். 'இது மொழிமாற்றுப் பொருள்கோளன்றிப் புலவர் வேறு செய்வதோர் செய்கை' என்று கூறிப் பின்னும் விரித்துரைத்தார் நச்சினார்க்கினியர். நன்னூலார் முதலாயினார் பொருள்கோள் எட்டுக்கூறினர். ஒன்பது பொருள்கோள் கூறினாருமுளர்.

இங்ஙனம் வரும் உரை விகற்பமெல்லாம் ஆராய்ந்தறிக.

இவ்வுரையில், மதுரை ஆவணியவிட்டம், உறையூர்ப் பங்குனி யுத்திரம், கருவூர் உள்ளிவிழா என்பன பெரிய திருவிழாக்களாகக் கூறப்பட்டுள. 'தேவரும் அசுரரும் அமர்செய்த காலத்துத் தேவர்களையும் அசுரர்களையும் ஒருவீர் ஒருவீர் மிக்காரை ஒறுப்பல் யானெனப் பாண்டியன் மாகீர்த்தி சந்து செய்வித்ததுபோல்' என்று ஒரு கதையும் கூறப்பட்டுளது. பல அரிய நூற்பெயர்களும், புலவர் பெயர்களும் இதிற் காணப்படுகின்றன.

வடவேங்கடந்தென்குமரி — யாயிடைத் — தமிழ் கூறு நல்லுலகத்து' என்று தொல்காப்பியர் கூறினர்.' என இவ்வுரைப்பாயிரங் கூறுவது, தொல்காப்பியனார் உட்கோளைப் பனம்பாரனார்கொண்டு மொழிந்தனர் எனக்

கருதியாகல்வேண்டும். பாயிரமியற்றினார் பனம்பாரனா ரெனக் கிளந்தோதிய பேராசிரியரும், நச்சினார்க்கினிய

ரும் செய்யுளியல் முதற்சூத்திரவுரையில், 'பாயிரத்துள் வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலி—னெழுத்துஞ் சொல்லும் பொருளும் ஆராய்வல் என்று புகுந்தமை யால்' என, அது தொல்காப்பியனார் உட்கோள் என்பது தோன்றக் கூறுதலுங் காண்க.



# ஐந்தாம் அதிகாரம்.

## நக்கீரர் இயற்றிய பாட்டுக்களின் ஆராய்ச்சி.

### க. திருமுருகாற்றுப்படை.

இது, கடைச்சங்கப்புலவர் தொகுத்த பத்துப்பாட்டுள் முதலாவதாக வுள்ளது. பதினோராந் திருமுறைத் தொகுப்பிலும் இது சேர்ந்துளது. பத்துப் பாட்டுத் தொகுத்தார் சங்கப்புலவரென்பது நச்சினார்க்கினியர் கருத்து. இது, மலைபடுகடாத்தில், 'தீயினன்ன' என்பதற்கு ஆளவந்தபிள்ளை யாசிரியர் குற்றங் கூறினரெனச் சொல்லி, அவரை மறுத்துரைக்கும் உரையால் விளங்குகிறது. எனினும், பத்துப்பாட்டு, ஏனைத்தொகை நூல்கள்போன்று, ஓர் தொகையாக வழங்கப்படவில்லை. திருமுருகாற்றுப்படை பாடிய வரலாறு புராணங் கூறுவதனை முன்பு கூறியுள்ளாம். அதிலிருந்து நாம் அறிவன, கடவுட் பூசை யாற்றும்பொழுது மனம் பிறிதாதல் ஏதமாம் என்பதும், முருகனைப் பாடுவார் எவ்வகை யிடுக்கணினின்றும் நீங்கி யின்புறுவர் என்பதும் ஆம். பிறவாறு அறிவாரும் அறிக. முருகாற்றுப்படை என்னுந் தொடர் முருகனிடத்து ஆற்றுப்படுத்தனென விரியும்.

'வீடு பெறுதற்குச் சமைந்த ஓர் இரவலனை வீடு பெற்ற
ஒருவன் முருகக் கடவுளிடத்தே ஆற்றுப்படுத்தியதாக
அம் முருகக்கடவுளைப் பாடியது இப் பாட்டு. ஆற்றுப்
படுத்தலாவது, கூத்தர் முதலாயினோர் ஓர் தலைவன்பால்
தாம் பெற்ற பெருஞ் செல்வத்தை எதிர்வந்த நல்கூர்



வாளரான கூத்தர் முதலாயினோர்க்கு அறிவுறுத்து, அவ
ரும் ஆண்டுச் சென்று அன்ன பெறுமாறு வழிப்படுத்
துரைத்தல் என்பது, 'தாவினல்லிசை' என்னுஞ் சூத்
திரத்து, 'கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்,
ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப், பெற்ற பெருவளம்
பெறாஅர்க் கறிவுறீஇச், சென்று பயனெதிரச் சொன்ன
பக்கமும்' என்பதனாற் பெறப்படுகின்றது. பத்துப்பாட்
டுள் ஐந்து பாட்டுக்கள் ஆற்றுப்படையாக வுள்ளன.
ஏனை ஆற்றுப்படையெல்லாம் மக்களிடத்து ஆற்றுப்ப
டுப்பன. பரிசில் பெறற்குரியாரைக் கிளந்தெடுத்து

'பொருநராற்றுப்படை' முதலிய பெயரானே வழங்குவன. இஃதொன்றும் கடவுள்பால் ஆற்றுப்படுப்பது. பரிசிலளித்தற் குரியார் பெயர் கிளந்து 'முருகாற்றுப்படை' என ஏழாம் வேற்றுமையாகவும், 'திரு' என்னும் அடை புணர்த்தும் வழங்குவது. பிற ஆற்றுப்படைகட்குப் பொருளாயினர் ஓரொரு காலத்தே விளங்கி மறைந்தாராகலின், அப் பாட்டுக்களின் முக்கியப் பொருளொடு ஏனைக்காலத் திரவலர்க்குச் சிறிதும் இயைபில்லை. இதற்குப் பொருளாயினர் நித்தராகலின் இதன் முக்கியப் பொருளொடு எக்காலத் தெவ்வெவர்க்கும் இயைபுண்டு. இன்ன பல சிறப்பு நோக்கியே இது முதலதாக வைக்கப்பட்டுளது. தொல்காப்பிய வுரையில் 'இதனைப் புலவராற்றுப்படை என்று உய்த்துணர்ந்து பெயர் கூறுவார்க்கு முருகாற்றுப்படை யென்னும் பெயரன்றி அப் பெயர் வழங்காமையான் மறுக்க.' என்று நச்சினார்க்கினியர் கூறியிருத்தலின், இதனைப் புலவராற்றுப்படையெனவும் ஒரு சாரார் கூறினராதல் வேண்டும்.

மூந்நூற்றுப் பதினேழு அடிகளையுடைய இப்பாட்டு ஆறு பிரிவினதாக அமைந்துளது.

 

முதற் பிரிவு.—நீ முருகக்கடவுளின் திருவடிப் பேற்றை விரும்பினையாயின் அதனை இப்பொழுதே பெறுகுவை; அவர் திருப்பரங் குன்றத்திலே விரும்பி யுறைதலு முரியர்; என்று கூறுகிறது. இதன்கண் வரையுறையும் சூரரமகளிர் விளையாட்டும், பேய்மகள் துணங்கையாடலும் வருணிக்கப்பட்டுள. சாம்பூநதம் என்னும் பொன் 'நாவலொடு பெயரிய பொலம்' எனக் கூறப்பட்டுளது. 'வரிப்புனை பந்து' என முதனிலை வினையெச்சப் பொருளில் வந்துளது. அரசர்கள் பகைவரை மகளிராக்கி அவர்கொண்டு விளையாடுதற் குறிப்பாகத் தம் கொடிக்கருகே பந்தும் பாவையும் தூங்கவிடுதலாகிய வழக்கம் கூறப்பட்டுளது. 'அறுவேறு வகையி னஞ்சுவர மண்டி......மாமுதல் தடிந்த' என்புழி, முருகக்கடவுளின் திருவவதாரம் முதலியபற்றிக் கந்தபுராணத்தின் வேறுபடக் கூறுவர் நச்சினார்க்கினியர். அவர் கூற்றுக்கு ஆதாரமாகவுள்ளது 'பாயிரும் பனிக்கடல்' என்னும் பரிபாடற் பாட்டாகும். 'சேவடி படரும்' என்றவிடத்து, "திருவடியே வீடாயிருக்கு மென்றார்; அது, * 'தென்னன் பெருந்துறையான்—காட்டாதனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித்—தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி' என்பதனானும், பிறருந் திருவடியைக் கூறு மாற்றானு முணர்க." என்ற வுரை சிந்திக்கத்தக்கது.

இரண்டாம்பிரிவு.—முருகக்கடவுளானவர் யானையேறிப் பல்லியமியம்பத் திருச்செந்தூருக்கு ஆகாயவழியாக

எழுந்தருளுதலும் அவருக்கு நிலைபெற்ற குணம் என்று கூறுகிறது. ஆறு திருமுகங்களும் தனித்தனி புரியுந் தொழில்களும், அவற்றுள் ஒவ்வொரு முகத்திற்கும் இவ்

* திருவாசகம்—திருவம்மானை.



விரண்டு கைகள் இனமாகப் பன்னிரண்டு திருக்கைகளும் புரியுந்தொழில்களும் இதில் கூறியிருப்பது படித்துணர்ந்து இன்புறற்பாலது.

'ஒரு முகம்...வள்ளியொடு நகையமர்ந்தன்று' என்னுமிடத்து, "காமநுகர்ச்சியில்லாத இறைவன் இங்ஙனம் நகையமர்ந்தான்; உலகில் இல்வாழ்க்கை நடத்தற்கென்றுணர்க. அது * 'தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்' என்பதனுட் 'பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்—விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ.' என்பதனானுணர்க." என்றவுரையும்; 'ஒருகை மார்பொடுவிளங்க ஒருகை தாரொடு பொலிய' என்பதற்கு 'முனிவர்க்குத் தத்துவங்களைக் கூறி உரையிறந்த பொருளை யுணர்த்துங்காலத்து ஒருகை மார்போடே விளங்காநிற்க, ஒருகை மார்பின் மாலை தாழ்ந்ததனோடே சேர்ந்துஅழகுபெற' என்று கூறி, "இறைவன் மோனமுத்திரை யத்தனைத், தானேயே யிருந்துகாட்ட, ஊமைத் தசும்புள் நீர்நிறைந்தாற்போல ஆனந்த மயமான

வொளி மாணாக்கர்க்கு நிறைதலின், அதற்குரிய மோன முத்திரை கூறிற்று. 'தன்னை யுன்னி யென்னையாக்கிய போழ்தே யானவுனையினேன்' என்பதனை னுணர்க." என்ற வுரையும் சிந்திக்கற்பாலன.

அலவாய் என்பது நாமனூரலைவாயென்னும் திருப்பதி யென்பர் உரைகாரர். நாமனூர் என ஒன்று பாண்டிநாட்டி லுள்ளதாகப் பழைய திருவிளையாடல் கூறுகிறது. திருச்செந்திலுக்கு நாமனூர் என்பதும் ஒரு பெயர்போலும்?

* திருவாசகம்—திருச்சாழல், ௬.



மூன்றும்பிரிவு.—முருகக் கடவுளாற் சபிக்கப்பட்டு, அயன் மண்ணிடைத்தோன்றி மயக்கமுறுங்கால், முத்தொழிலும் நடைபெறுமையால், அயன், அரி, அரன் என்னும் மூவரும் தத்தம் தொழிலியற்றித் தலைவராதற்கு நான்முகனைப் பழைய நிலையில் நிறுத்தல் கருதி, கலுழக்கொடியையுடைய மாயோனும், ஏற்றுக்கொடியையுடைய முக்கட் செல்வனும், நூறு வேள்வி முடித்தோனாகிய இந்திரனும், ஆதித்தர் பன்னிருவரும், உருத்திரர் பதினொருவரும், வசுக்கள் எண்மரும், மருத்துவர் இருவரும், பதினெண்கணங்களும் ஆகாயவழியே வந்து, கந்தருவர் தம்

மகளிருடன் யாழ் வாசிக்கவும், முனிவராயினோர் முன்பு செல்லவும், ஒரு சேரச்சென்று, குறைவேண்டிநின்று, வரம்பெறுதற்குக் காணும்படியாக அருட்கற்பினையுடைய தெய்வயானையாருடன் திருவாவினன் குடியிலே தங்கி யிருத்தலுமுரியர்; என்று கூறுகிறது. திருவாவினன் குடி பழனித்திருப்பதி (பொதினிமலை). முற்காலத்து **ஆவி** குடியினர் ஆண்டமையால் ஆவினன்குடி எனப் பட்டது. **சித்தன் வாழ்வு** என்றும் இதற்கொரு பெய ருண்டு போலும்? பிள்ளையார் அயனைச் சபித்த வரலா றுக உரைகாரர் எழுதியிருப்பது கருதத்தக்கது. பரி பாடல் எட்டாம்பாட்டில், 'திருமாலும், சிவனும், நான் முகனும், தேவர் முப்பத்து மூவரும், திசைகாப்பாளர் எண்மரும், ஏனை அமரரும், அவுணரும் முருகக்கடவுளைக் காண்டல் காரணமாகத் திருப்பரங்குன்றத்தில் வந்திருப் பர்' என்று கூறுவது இங்கே சிந்திக்கற்பாலது. முனி வரியல்பு இதில் நன்கு கூறப்பட்டுளது.

**நா**ன்காம் பிரிவு.—இருபிறப்பாளர் நீராடிப் புலராத ஆடை உடம்பிற்கிடந்து புலருமாறுடுத்து, உச்சியிற் கை கூப்பித், திருவாறெழுத்தினை அடக்கியுள்ள மந்திரத்தை



விதிப்படி நாப் புடைபெயருமளவாக வுச்சரித்து, வழி படுங் காலமறிந்து தோத்திரங் கூறுநிற்க, முருகக்கடவுள் அதற்குப் பெரிதும் மகிழ்ந்து, திருவேரகத்தின்கண் உறைதலு முரியர்; என்று கூறுகிறது. இதன்கண் இரு

பிறப்பாளர் ஒன்பது இழையாகிய முப்புரி நூலணிதலும், அவர் அறுவகை யியல்பின் வழாமையும், முத்தீ யோம்பலும், நாற்பத்தெட்டி யாண்டு பிரமசரியக் காத்தலும் கூறப்பட்டுள. 'ஏரகம்—மலைநாட்டகத்தொரு திருப்பதி' என்பர், நச்சினார்க்கினியர். பிற்காலத்துப் பெரியார் பலரும் ஏரகம்—சுவாமிமலை என்றுகொண்டே பாடியுள்ளார்கள்.

ஐந்தாம் பிரிவு.—குமாரக் கடவுளானவர் படிமத்தான் றொடுத்த கண்ணியைச் சூடி, செவ்வாடை யுடுத்து, இன்ன பல கோலங்களை யுடையராய், இயம் பலவும் எழுப்பி, தம்மைச் சேவிப்பாரும், சேவித்துப் பாடுவாருமாகிய மகளிருடனே மலைதோறுஞ் சென்று விளையாடுதலாகிய நிலைபெற்ற பண்பினையுடையர்; என்று கூறுகிறது. இதில் மலைவாழ் கானவர் தொண்டகப் பறை முழக்கிக் குரவையாடுதல் கூறப்பட்டுளது. இதிலுள்ள 'குன்றுதோறாடல்' என்னுந் தொடரை ஓர் திருப்பதியின் பெயராகக்கொண்டார் பலர். அஃது ஓர் பதியின் பெயரன்று. மலைதோறுஞ் சென்று விளையாடுதல் என்பதே அதற்குப் பொருளாகும். நச்சினார்க்கினியரும் இப்பொருளே கூறியிருத்தல் காண்க. கந்தபுராணத்துள் 'குன்றுதோறாடிய' என்றும், 'தணிகையாதிப் பூவுலகுள்ளவெற்பில்' என்றுங் கூறியிருத்தலுங் காண்க. ஏனைத் திருப்பதிகளோடு உடன் எண்ணவேண்டிய வழி 'குன்றுகள்' எனக்கொள்ளல் பொருத்தமாகும். மயிலேறும் பெருமாள்பிள்ளையும் 'குன்றுகள்' என்றே கூறி

னர். அருணகிரிநாதர், தணிகையாதி மலைகளைத் தனித் தனியாகவும், குன்றுகள் எனப் பொதுவாகவும் பாடியுள்ளார்.

ஆறும் பிரிவு.—பழம் முற்றின சோலைகளையுடைய மலைக்கு உரியராகிய குமாரக் கடவுளானவர், முற்கூறிய ஊர்களன்றி, வேறுபட்ட பலவாகிய ஊர்களினும், காடு, கா, துருத்தி, யாறு, குளம், சதுக்கம், சந்தி, கடப்பமரம், மன்றம், பொதியில், கந்துடைநிலை ஆகிய விடங்களினும், விழாச்செய்யுமிடத்தும், ஊர்ச்சாந்தி செய்து அன்பர்கள் பூசிக்குமிடத்தும் உறைதலுமுரியர்; யான் அறிந்தபடியே கூறினேன்; அவ்வவ் விடங்களிலே யாயினுமாக, பிற விடங்களிலேயாயினுமாக, நீ கண்டவிடத்துத் துதித்து, வாழ்த்தித்,தண்டனிட்டு, 'அறுவர் பயந்த ஆறமர் செல்வ! ஆல்கெழு கடவுட் புதல்வ! மால்வரை மலைமகள் மகனே! ........குரிசில்!' என்று நான் கூறியபடியே, நீயும் கூறிப் புகழ்ந்து, 'ஒப்பாரில்லாத மெய்ஞ்ஞானத்தை யுடையோய்! நின் திருவடியைப் பெற நினைந்து 'வந்தேன்' என்று நீ கூறுமுன், அவரைச் சேவிக்கும் கூளியர் சென்று, நீ வந்த வாற்றை யறிவிக்க, அவரும் உடன் அணுகி, உட்குந் திறம்பொருந்திய நெடியவடிவை மறைத்துத், தமது

பழைய இளைய வடிவைக் காட்டி, 'நீ வந்த காரணத்தை
யான் முன்னே யறிவேன்; நீ அஞ்சல்வேண்டா.' என்று
அன்புள்ள மொழிகள் பலவும் அருளிச்செய்து, கடல்
சூழ்ந்த வுலகத்தில் ஒப்பின்றி விளங்கும்படி பெறுதற்
கரிய வீடுபேற்றினை நினக்குத் தருவர்; என்று கூறுகிறது.
கோழிக் கொடி நிறுத்தி, பலியறுத்து, ஊர்களில் விழாச்
செய்தல் இதிற் கூறியுள்ளது. குறமகள் முருகவேளை
யழைத்து ஊர்ச்சாந்திசெய்தல் விளங்கக் கூறப்பட்டுளது.
தெய்வத்திற்கு நறும்புகை யெடுத்தலும், மலர்தூவலும்,



மணியசைத்தலும், இயம் ஒலிப்பித்தலும், பண் பாடுத
லும், கொம்பு ஊதுதலும் அக்கால வழக்கங்களாக இதனா
லறியப்படுகின்றன. 'மதி' என்னும் அசைச்சொல்
படர்க்கையில் வந்துளது. இதில் அருவி வீழ்ச்சி கூறி
யுள்ளது இயற்கை நவிற்சியாக மகிழ்ச்சி பயப்பதாகும்.

இதனிறுதியிலுள்ள 'பழமுதிர் சோலைமலை' என்
பதில், 'பழமுதிர் சோலை' ஓர் திருப்பதியின் பெய
ரெனக்கொண்டு, ஆறு திருப்பதியாக எண்ணினர் ஒரு
சாரார். 'சோலைமலை' ஓர் திருப்பதியின் பெயரெனக்
கொண்டார் ஒரு சாரார். சோலைமலை முருகக் கடவு
ளுடையதாகப் பழைய தமிழ்நூல்களால் விளங்கவில்லை.
அது திருமால் குன்றென்று பரிபாடல், சிலப்பதிகாரம்,
முதலியவற்றால் தெரிகிறது. அஃது, இருங்குன்றம்,

திருமாலிருங்குன்றம், திருமாலிருஞ் சோலைமலை என்னும் பெயர்களானும் வழங்கும். இந்நூலிலே, திருப்பரங்குன்றம் முதலிய நான்கினைக் கிளந்தெடுத்து, முருகக் கடவுள் அவ்விடங்களி லுறைவர் என்று கூறிப், பின் மலைதோறும் விளையாடுவரென்று ஏனை மலைகளைப் பொதுப்படக் கூறி, அதன்பின், காடு, கா முதலியவற்றில் உறைவரென்று கூறி, முறைப்படுத்திருத்தலும், சோலைமலையில் உறைவரென்று கிளந்தோதாது, 'மலைகிழவோன்' எனப் பெயர் மாத்திரையாகக் கூறியிருத்தலும் நோக்குங்கால், சோலைமலை முருகக் கடவுளுடையதென இந்நூலானும் துணியக் கூடவில்லை. இதற்குரைகண்ட மெச்சும் புலமை நச்சினார்க்கினியரும், ஏனையவற்றைத் 'திருப்பரங்குன்று', 'என்னும் திருப்பதி', 'ஒருதிருப்பதி', 'என்னும் ஊர்' என அடைகொடுத்தும், விளக்கியும் போந்து, 'பழமுதிர் சோலை மலைகிழவோன்' என்றவிடத்துச் சோலைமலைக் குரியன் என்றேனும் கூறாமல், 'பழம் முற்றின சோலைகளை



யுடைய மலைக்கு உரிமையையுடையோன்' என்று கூறுதலின், அவர்க்கும் அஃதோர் திருப்பதி யெனக்கொள்ளுதல் கருத்தன்றாம். 'கிழவோனென்ற பெயர் உடம்பொடு புணர்த்தலாற் கொள்க' என்று அவர் எழுதியிருப்பதனைச் சிலர் திரியக்கொண்டோராவர். உரையாளர் கருத்து, 'ஓன்' என்னும் ஈறுபெற்றுக் கிழவோன் என நிற்பதற்கு இலக்கணங் காட்டியதாகும். இதனை, விளி மரபு-பன்னிரண்டாஞ் சூத்திரத்திற்கு அவரெழுதிய

வுரையா னறிக.

கந்தபுராணம்-திருநகரப்படலத்தில்,

மேவருங் கூடன்மேலை வெற்பினி லலைவாய் தன்னி
லாவினன் குடியி னல்லே ரகந்தனிற் றணிகை யாதிப்
பூவுல குள்ள வெற்பிற் பொற்புறு மேனை வைப்பிற்
கோவில் கொண் டருளி வைகுங் குமரகோட் டத்து
மேயோன்.'

என்று, சோலைமலையின்றியே ஆற்றுப்படை கூறிய முறைப்படிக் கூறியிருத்தலும் காண்க. கந்தபுராணம்— வாழ்த்துச் செய்யுளொன்றில், 'பழமுதிர் சோலையம் பகவற் போற்றுவாம்' என்பது காணப்படுகிறது. இஃது அவ்வாசிரியர் பாடியதெனின், 'பழமுதிர் சோலை மலை' என்பதற்கு அவர் இரண்டு விதமாகவும் பொருள்கொண்டன ரெனல்வேண்டும். அருணகிரிநாதர் முதலிய பெரியோர்கள் சோலைமலையை முருகக்கடவுளின் திருப்பதியுள் ஒன்றாக வைத்துப் பாடியிருக்கின்றனர். 'சேயோன் மேய மைவரை யுலகம்' என்று இலக்கணங் கூறுதலாலும், இப்பாட்டுத்தானும்; 'குன்றுதோறாடலும் நின்றதன்பண்பு' என்றும், 'விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ' என்றும், 'மலைகிழவோனே' என்றும் கூறுதலாலும், குறிஞ்சி முழுதும் முருகக் கடவுளுடையதென்னும்



உரிமைபற்றி இருங்குன்றமும் முருகனுடையதென்று கூறுதலும் இழுக்காகாது. இரு கடவுளர்க்கும் ஒப்பவுரிமை யுடைத்தாதலும் அமையும்.

திருப்பரங்குன்றம் முதலியவற்றை முருகக்கடவுளின் படைவீடு என வழங்கிவருகின்றனர். இவ்வழக்கு எக்காலத்துளதாயதென்று தெரிந்திலது. முருகக்கடவுள் சேனாபதியாகலின் அவருறையு மிடங்களைப் படைவீடு என வழங்கினர்போலும். இப்பாட்டிலும் 'வானோர் வணங்குவிற்றானைத் தலைவ' என்று வந்துளது.

இப்பாட்டி னீற்றிலுள்ள சொல் 'கிழவோனே' என்பது. இதனைப் புராணம் எடுத்துக் கூறுதல் முன்பு காட்டினாம். சிறுபாண் ஒழிந்த பிற ஆற்றுப்படைச் செய்யுள்களும் இச்சொல்லான் முடிந்திருத்தலின், ஆற்றுப்படை இவ்வீற்று னிறுதல் பெரும்பான்மை மரபுபோலும்?

இப்பாட்டின்புறத்தே சில வெண்பாக்களுள்ளன. அவை பழைய ஏட்டுப் பிரதிகளில் இல்லை என்பர். இப்பாட்டிற் போலவே, ஏனைய ஒன்பது பாட்டுக்களின் புறத்தும் ஒன்றும் பலவுமாக வெண்பாக்களுள்ளன. அவற்றுள் ஒன்றற்கேனும் உரை யெழுதப்படாமையின் அவை பத்துப்பாட்டாசிரியர்கள் பாடியவல்ல என்பதே உரையாளர் கருத்துப்போலும்? அது கருத்தாயினும், பொருநாற்றுப்படையில், 'கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்' என்னுந் தொடர்க்குப் பொருள் கூறுமிடத்து, 'முச்சக்கரமும்—என்னுங் கவியானே கரிகாலாதலுணர்க' என்று அப்பாட்டின் புறத்துள்ள வெண்பா வொன்றினை அவர் மேற்கோளாகக் காட்டியிருத்தலின், அதுவும், அது போன்ற பிற சில வெண்பாக்களும் அவ்வுரையாளர் காலத்தின் முன்பே யிருந்தனவென்பதும், அவையும் உரைகாரரால் மதிக்கப்பட்டன வென்பதும் வெளியாகின்றன.

திருமுருகாற்றுப்படையின் புறத்துள்ள வெண்பாக்களில், 'குன்றமெறிந்தாய்' என்பது புராணத்துள்ளுங் கூறப் படுதலின் தொன்மையுடையதாகும். அதுவும், அதனை யடுத்துள்ள,

> 'குன்ற மெறிந்ததுவுங் குன்றப்போர் செய்ததுவும்
> அன்றங் கமரரிடர் தீர்த்ததுவும்—இன்றென்னைக்
> கைவிடா நின்றதுவுங் கற்பொதும்பிற் காத்ததுவும்
> மெய்விடா வீரன்கை வேல்.'

என்னும் வெண்பாவும், பதினோராந் திருமுறைப் பழம் பதிப்பிலுள்ளன. புதுப்பதிப்பில் வேறு வெண்பாக்க ளும் சேர்க்கப்பட்டன. 'கற்பொதும்பிற் காத்தது' என் னுந் தொடர் இங்கே கருதத்தக்கது. திருப் பரங்குன் றத்தில் ஒவ்வோராண்டிலும் நடைபெற்றுவரும் பங் குனித்திருவிழா—நான்காந் திருநாளில் முருகக்கடவுள் நக் கீரரைச் சிறைமீட்டருளிய திருவிளையாடல் நடை பெறுமென்றும், அப்பொழுது நக்கீரர் திரு வுருவம் எழுந்தருளுதல் மரபென்றும் கூறுவர்.† இத்திரு முரு காற்றுப்படையைப் பலர் நியமமாகப் பாராயணம்பண்ணி வருகின்றனர். இப்பாட்டின் அருமையை அறிந்துகொள் ளச் சில பகுதிகள் கீழே தருகின்றோம்.

### முனிவரியல்பு.

> சீரை தைஇய உடுக்கையர் சீரொடு
> வலம்புரி புரையும் வானரை முடியினர்

மாசற விமைக்கு முருவினர் மானின்
உரிவை தைஇய வூன்கெடு மார்பின்
என்பெழுந் தியங்கும் யாக்கையர் நன்பகல்
பலவுடன் கழிந்த வுண்டியர் இகலொடு

---

† பழைய திருவிளையாடல், ஆராய்ச்சி, பக்கம்—௬௫ காண்க.



செற்றம் நீக்கிய மனத்தினர் யாவதும்
கற்றோ ரறியா வறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு
கடுஞ்சினங் கடிந்த காட்சியர் இடும்பை
யாவது மறியா வியல்பினர் மேவரத்
துனியில் காட்சி முனிவர் முற்புக' ௧௨௬—௧௩௭.

## அருவிவீழ்ச்சி.

........................பலவுடன்
வேறுபஃ றுகிலி னுடங்கி யகில்சுமந்
தார முழுமுத லுருட்டி வேரற்
பூவுடை யலங்குசினை புலம்ப வேர்கீண்டு
விண்பொரு நெடுவரைப் பரிதியிற் றொடுத்த
தண்கம ழலரிறால் சிதைய நன்பல
வாசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமல ருதிர யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுத
லிரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங்களிற்று

முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று
நன்பொன் மணிநிறங் கிளரப் பொன்கொழியா
வாழை முழுமுத றுமியத் தாழை
யிளநீர் விழுக்குலை யுதிரத் தாக்கிக்
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்
கோழி வயப்பெடை யிரியக் கேழலோ
டிரும்பனை வெளிற்றின் புன்சா யன்ன
குரூஉமயி ரியாக்கைக் குடாவடி யுளியம்
பெருங்கல் விடரளைச் செறியக் கருங்கோட்
டாமா நல்லேறு சிலைப்பச் சேணின்
றிழுமென விழிதரு மருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே.' உகூ—நகள.



## உ. நெடுநல்வாடை.

இது பத்துப்பாட்டுள் ஏழாவதாக வுள்ளது. நூற்றெண்பத்தெட்டு அடிகளையுடையது. சொன்னயம் பொருணயங்களில் மிகச் சிறந்தது. தலையாலங்கானம் என்னுமிடத்தில் தன்னுடன் மாறுபட்டெழுந்த சேரன், செம்பியன் முதலிய எழுவரைப் போர்வென்ற பெருவீரனும், பெருவள்ளலுமாகிய பாண்டியன் நெடுஞ்செழியனைப் பாடியது. பகைமேற்சென்ற தலைவனைப் பிரிந்து வருந்தாநின்ற தலைவிக்கு, அவ்வருத்தந் தீரும்படி, அவன்

விரைவிற் பகைவென்று மீளவேண்டுமெனக் கொற்றவை யைப் பரவுவாள் கூறியதாகப் பாடப்பெற்றுளது இது.

இப்பாட்டு அகமோ புறமோ என ஐயுறுந் தன்மைத் தெனினும், 'வேம்புதலை யாத்த நோன்கா ழெஃகம்' எனப் பாண்டியனது அடையாளப் பூக் கூறியிருத்தலா னும், அது பெயர் கூறியதை யொக்குமாகலானும் புறனே யாயிற்று. கூதிர்ப்பாசறை கூறுதலிற் புறத்தின் பகுதி யாய வாகைத்திணையாயிற்று. கொற்றவை நிலை கூறுத லின் வஞ்சித்திணையின் சம்பந்தமு முடையது. கூதிர்க் காலத்துத் தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவிக்கு ஒரு பொழுது ஓரூழிபோல நெடிதாய்க் காட்டுதலின் நெடுமை யும், கூதிர்க்காலம் பிரிந்திருப்பார்க்கு வருத்தஞ்செய்யும் இயல்பினதேனும், காமத்தை வென்றிகொண்டு பாசறையி லிருக்கும் தலைவற்கு வருத்தஞ் செய்யாமையால் நன்மை யும் வாடைக்கு அடைகளாய் வந்தன. வாடை என்பது ஆகுபெயராய்க் கூதிர்க்காலத்துப் பாசறையை உணர்த் திற்று. நெடுஞ்செழியன் எழுவரரசரோடே பொரும் பாசறையே இப்பாட்டிற் கூறியதென்பது உரையாளர் கருத்தாதல், 'பலரொடு முரணிய பாசறைத் தொழிலே' என்னும் ஈற்றடிக்கு அவர் கூறிய வுரையாற் பெறப்படும்.

## நக்கீரர். 71

இப்பாட்டு, இன்னணம் தலைவியை ஆற்றுவித்தல் தலைக்கீடாக, ஐப்பசி, கார்த்திகை மாதங்களாகிய கூதிர்க் காலத்தி னியல்பையும், அக்காலத்துத் தனித்திருக்கும் தலைவியின் ஆற்றுமை மிகுதியையும், தலைவன்றன் பாச

றையிருப்பையும், பிறவற்றையும், அடியினிழலின் அறியத் தோன்றுமாறு கற்பவர் நெஞ்சிறைகொள்ளும் பொற்புற தமிழின் இனிது விளக்கலுறுவது. இதில் முன் எழுபத்திரண்டு அடிகளில் கூதிர்க்காலத்தியல்பும்; அடுத்து நாற்பத்திரண்டு அடிகளில் கோயிலும், கோயிலுள் ஆடவர் குறுகா அருங்கடி வரைப்புக்களும், அவற்றுள் தலைவியிருக்கும் இல்லமும்; அடுத்து இருபத்தொரு அடிகளில் தலைவியமர்ந்திருக்கும் தந்தக் கட்டிலும், சேக்கையும்; அடுத்து முப்பத்தொரு அடிகளில் தலைவி வருத்தத்துடனிருக்கும் இயல்பும்; அடுத்து இரண்டு அடிகளில் கொற்றவையை வேண்டிக்கோடலும்; இறுதியிலுள்ள இருபது அடிகளில் தலைவன் பாசறையிருப்பும் கூறப்பட்டுள. இப்பாட்டின் உயிர்நிலையாகவிருப்பன,

> 'புலம்பொடு வதியு நலங்கிள ரரிவைக்
> கின்னா வரும்படர் தீர விறறந்
> தின்னே முடிகதில் லம்ம' ககூகூ—ககூஅ.

> 'வேந்தன், பலரொடு முரணிய பாசறைத்
> தொழிலே' கஅஎ—கஅஅ.

என்பவே. இப்பாட்டினைப் படிப்பவர் இறுதிச்சொல் காறும் படித்தன்றி அமையாவாறு மேன்மேலும் அவாவினை யெழுப்பிச் சென்று, 'பாசறைத்தொழில்' என்னும் சுழுவாயை இறுதியிற் கொண்டு விளங்கும்படி இயற்றியுள்ள திறப்பாடு வியக்கத்தக்கதாம்.

தலைவனைப் பிரிந்து தன்னுடைய குழை முதலிய அணிகலன்களையுந் துறந்து, கூந்தலும் கைசெய்யாது

மாசுண்ட உடையுடுத்து, யானைக் கொம்பினாற் செய்யப் பட்டு, நாடாவினாற் பின்னியிருக்கிற கட்டிலின்கண், பல் வேறு மெத்தைகள் போட்டுப் பூக்களினிதழ் பரப்பித் துகிலின் றூமடி விரித்துப் படுத்திருக்கும் தலைமகள், செவிலியராதியோர், பொருளொடு புணராப் பொய்ம் மொழியும் மெய்ம்மொழியுமாகிய உரைகள் பலவற்றை யுஞ்சொல்லி, 'நின்மனக் கினியதுணைவர் இன்றே வந்து விடுவர்' என்று பலவாறு தேற்றவும், தேருளாய், கட்டி லின்மேல் விதானத்தில் மெழுகுபடாத்தி லெழுதியுள்ள திங்களின் பக்கத்திருக்கும் உரோகிணியைப் பார்த்து, 'இதுபோன்று யாமும் பிரிவின்றி யிருக்கப்பெற்றி லேமே' என்று சிந்தித்துப் பெருமூச்செறிந்து, கண் களினின்றும் ததும்புகின்ற நீரைத் தனது சிவந்த விர லால் எடுத்துத் தெறித்து வருத்தத்துடன் தங்கியிருக் கின்றாள் தலைமகள்; என்று கல்லும் கரைந்துருகப் பாடி யுள்ளது. இதில் தலைவிக்குத் தலைவன்பாலுள்ள அன்பு மிகுதியும், கற்புடைமைக்கேற்ற பொற்புடை யொழுக்கமும் எவ்வளவு நன்றாய்ப் புலனாகின்றன! தலைவனைப் பிரிந் திருக்கும் உயர்குடித் தலைவியின் மனப்பான்மையை இத னினுஞ் சிறக்க எங்ஙனம் விவரிக்கலாகும்!

பாசறையிலிருக்கின்ற வேந்தன், முதலில் மற்றா ருடைய களிறுகளைக் கொன்ற தன் வீரர்கள் பின் அப் பகைவருடைய வாட்களால் போழப்பட்ட விழுப்புண்

அணிந்திருத்தலைக் கண்டு, பரிகரித்தற் பொருட்டு நடு
யாமத்திலே பள்ளிகொள்ளானாய்த் தனதிருக்கையின்
புறம்போந்து, கொற்றக்குடையானது மழைத்துளியை
மறைப்பவும், ஆண்டாண்டுள்ள குதிரைகள் உதறுகிற
துளிகள் தன்மீது தெறிப்பவும், வாளெடுப்பான் தோளி
லே வைத்த வலக்கையையுடையனாய், இடத்தோளினின்



றும் நழுவிவீழ்கின்ற உத்தரீயத்தை இடப்பக்கத்தே
யணைத்துக்கொண்டு, கொளுத்தப்பட்டுள்ள விளக்குக
ளால் வெளிச்சமுடையவாயிருக்கும் அப்பாசறையிடங்
களில் சேற்றின்மீது நடந்துசென்று, முன்னே செல்லும்
சேனாபதியானவன் புண்பட்டவீரரை முறையே முறை
யே காட்டக்கண்டு, அவர்கட்கு மனம் மகிழும்படி முக
மலர்ந்து இன்னுரைகூறி, அவர்கள் போர்த்தொழிலொழி
ந்து இனிதிருக்குமாறு செய்துவருகின்றான்: என்று
கூறியிருப்பதிலிருந்து, அக்காலத்துத் தமிழ் வேந்தர்கள்
போரின்கண் எவ்வளவு தாளாண்மையுடையராய்த், தம்
படைவீரர் பால் எவ்வளவு அன்பும், இரக்கமும் உடைய
ராய் இருந்துவந்தனர் என்பது விளங்குகிறது. இதிற்
கூறப்பட்டுள்ள வாயினிலை, கதவம், தந்தக்கட்டில், விதா
னம் என்பவற்றின் நுட்பமமைந்த தொழிற்றிறங்கள், அக்
காலத்துத் தொழின் முதிர்ச்சியையும், நாகரிகத்தையும்
விளக்கவல்லன. இரும்பு, பொன், தந்தம் முதலியவற்

றின் மாட்சிமைப்பட்ட தொழிற்றிறங்களும், மனைநூல், வானநூல் முதலிய நூற்பயிற்சிகளும் அக்காலத்து விளக்கமுற்றிருந்தமை புலனாகின்றது.

கோபுரவாயில்கள் வெற்றிக்கொடியோடு வேழங்கள் புகுதும்படி உயர்ந்திருக்குமென்றும், அரமனையிடங்களில் யவனர் (Greeks) இயற்றிய சிறந்த பாவை விளக்குக்கள் எரிந்து கொண்டிருக்குமென்றும் இதனாலறியப்படுகின்றது.

கூதிர்க்காலத்தில் குளிர் மிகுதியால் பசுக்கள் கன்றுக்குப் பால் கொடாமல் உதைக்குமென்றும், அழகு பெறச் செய்யப்பட்ட ஆலவட்டங்கள் உறையிடப்பட்டுச் சிலந்தி நூலாற் சூழப்பட்டனவாய் வளைந்த முளைக்கோல்



களிலே தூங்குமென்றும், யாவரும் தண்ணீருண்ணாமல் இந்தளம் என்னும் கனற்சட்டியிலிட்ட நெருப்பின் வெம்மையை யேன்றுகொள்வரென்றும், பிறவாறும் கூறியுள்ளவை படிப்பவர்க்கு வியப்பைத் தருவனவாகும்.

## பாசறை.

‘புலம்பொடு வதியு நலங்கிள ரரிவைக்
கின்னா வரும்படர் தீர விறந்
தின்னே முடிகதில் லம்ம மின்னவி

ரோடையொடு பொலிந்த வினைநவில் யானை
நீடிரு டடக்கை நிலமிசைப் புரளக்
களிறுகளம் படுத்த பெருஞ்செய் யாடவ
ரொளிறுவாள் விழுப்புண் காணிய புறம்போந்து
வடந்தைத் தண்வளி யெறிதொறு நுடங்கித்
தெற்கேர் பிறைஞ்சிய தலைய நற்பல்
பாண்டில் விளக்கிற் பரூஉச்சுட ரழல
வேம்புதலை யாத்த நோன்கா ழெஃகமொடு
முன்னோன் முறைமுறை காட்டப் பின்னர்
மணிபுறத்திட்ட மாத்தாட் பிடியொடு
பருமங் களையாப் பாய்பரிக் கலிமா
விருஞ்சேற்றுத் தெருவி னெறிதுளி விதிர்ப்பப்
புடைவீ ழந்துகி லிடவயிற் றழீஇ
வாடோட் கோத்த வன்கட் காளை
சுவன்மிசை யமைத்த கையன் முகனமர்ந்து
நூல்கால் யாத்த மாலை வெண்குடை
தவ்வென் றசைஇத் தாதுளி மறைப்ப
நள்ளென் யாமத்துப் பள்ளி கொள்ளான்
சிலரொடு திரிதரும் வேந்தன்
பலரொடு முரணிய பாசறைத் தொழிலே.

கசுசு-க அஅ.

## நக்கீரர். 75

### ங. பிறபாட்டுக்கள்.

நற்றிணையில் இவர் பாடியன ஏழு பாட்டுக்களுள்

ளன. அவற்றில், வெளிப்படையுவமமும், உள்ளுறையுவமமும் பல அமைந்துள்ளன. பாண்டியனது மருங்கூர்ப் பட்டினம், வாணனது சிறுகுடி, அருமனது சிறுகுடி என்னும் ஊர்கள் கூறப்பட்டுள. பகற்பொழுதில் நகரின் கண் மகளிர் பலியாக முற்றத்திற் போகட்ட சோற்றை யுண்ட காக்கைகள், பொழுதுபட்ட மாலைப்பொழுதில், நாவாயிற் பிணித்த பாய்மரத்திற் சென்று தங்கா நிற்கும் 'மருங்கூர்ப்பட்டினம்' என்றும், வட்டமாகிய கண்களை யும், கூரிய வாயையுமுடைய காக்கைப்பேடை தன் பிள்ளையைத் தழுவிக்கொண்டு சுற்றத்தையும் அழைத்துப், பொரிக்கறியோடு கூடிய சோற்றுத் திரளையைத் தெய்வத் திற்கிடும் பலியுடனே கவர்ந்துகொள்ளுமாறு மனையின் கண்ணே கூடினவாயிருக்கும் பழமையான வீடுகளையு டைய 'அருமன்' என்பவனது 'சிறுகுடி' என்றும் இவ் ஊர்கள் பாராட்டப்பட்டுள்ளன.

குறுந்தொகையில் எட்டுப் பாட்டுக்கள் இவர் பாடி யனவாகும். இவற்றில், அருவியொலிக்கு முழவொலி யை உவமை கூறுகின்றார். விளைந்த தினைக்கொல்லைக ளில் தெய்வத்திற்கென்று விடப்பட்டிருக்கும் சில கதிர் களை அறியாது உண்ட மயில் வெறியாடு மகள்போலும் வனப்பினதாகி நடுங்கும் மலை என்கின்றார். நெஞ்சு ஈரம்பட்ட செவ்விப் பைம்புனத்து ஓரே ருழவன்போல நடுக்குறுகிறது என்கிறார். மேனியின் பசப்பு ஒரு பெற் றியே தங்காது என்பதற்கு, 'நில்லாமையே நிலையிற்றாக லின், நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சிற், கடப்பாட்

டாளன் உடைப்பொருள்போலத், தூங்குதற்குரிய தன்று' என உவமங் கூறுகின்றார். பேயும் கண்பனிக்



கும்படி இரவில் மழைபொழியும் என்று பாடுகின்றார். தலைவன் பாங்கற்குக் கூறும் கூற்றில் வைத்து, 'என் நெஞ்சம் அமர்ந்தாருடன் ஒருநாள் கூடியிருக்கப்பெறின் பின் அரைநாள் வாழ்க்கையும் வேண்டலன் யான்' என்று உரைக்கின்றார்.

அகநானூற்றில் பதினேழு பாட்டுக்கள் இவரால் பாடப்பட்டனவாகும். இவற்றில், முடியுடை வேந்தரும், சிற்றரசருமாகிய பலரைப்பற்றிய குறிப்புக்கள் காணலாகும். இப்பாட்டுக்களில் வந்துள்ள உள்ளுறையுவமங்கள் மிகப்பாராட்டற்பாலன. வராற்போத்தானது தூண்டிலிற் கோத்த இரையை விழுங்கி, ஆம்பல் இலை கிழியவும், குவளைமலர் சிதையவும் எழுந்து பாய்ந்து, வள்ளைக் கொடியை மயக்கி, தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது, கயிறிடப்பட்ட கதத்தினையுடைய ஆனேறுபோல மதம் மிக்குக் கயத்தினை உழக்கும் ஊரன்; என்று கூறுகின்றார். இதிலுள்ள உள்ளுறையை ஆராய்ந்தறிக. பாண்டியன் நெடுஞ்செழியன் தலையாலங்கானத்துப் போரில் தன்னுடன் எதிர்த்த சேரன், செம்பியன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேள், பொருநன் என்னும் எழுவரரசரை ஒரு பகலில் வென்று முரசுங் குடையும் அகப்படுத்துக், களவேள்வியியற்றிய பொழுதில், அவனுடைய வீரர் ஆர்த்த ஆர்ப்பினும் அலர் பெரிது என்று

பாண்டியனது வெற்றியைப் புலப்படுக்கின்றார். செழி
யன், முசிறியை முற்றிக் களிறுகளைக் கொன்ற போர்த்
திறத்தினைக் கூறுகின்றார். மூவேந்தரும் வந்து முற்று
கையிட்டிருந்தபொழுது, அடைமதிற்பட்டிருந்த பாரிவள்
ளல், 'உலகுடன் திரிதரும் பலர் புகழ் நல்லிசை வாய்
மொழிக் கபிலன்' சூழ்ச்சியால் கிளிகளை விடுத்து, நெற்
கதிர்களைக் கொணர்வித்து, உண்டிருந்து மூவேந்தரையும்



வாளமருழக்கி, ஓடச் செய்தனன் என்று கூறியுள்ளார்.
'ஆரங்கண்ணி யடுபோர்ச் சோழர், அறங்கெழு நல்லவை
யுறந்தையன்ன, பெறலரு நன்கலன்' என்றும், 'வாடா
வேம்பின் வழுதிகூடல், நாளங்காடி நாறுநுதல்' என்
றும், 'கரும்பகட்டியானை நெடுந்தேர்க்கோதை திருமா
வியனகர்க் கருவூர் முன்றுறை.........தண்ணான்பொருநை
மணலினும் பல' என்றும் ஒரு பாட்டில் மூவேந்தர்
தலைநகரங்களையும் சிறப்பித்துக் கூறியுள்ளார். **எவ்வியா**
**னவன்** சென்று நன்மொழி கூறி வேண்டவும் அடங்காது,
**அன்னி**யானவன் **திதிய**னொடு பொருது அழிந்ததனைக்
கூறியிருக்கிறார். கார்த்திகை மாதத்துக் கார்த்திகைநாள்
இரவில் தெருக்களில் விளக்குக்களை வைத்து, மாலைகளால்
அலங்கரித்துப், பலருங்கூடி மகிழ்வுடன் விழாவயர்தலும்,

புதுவதாக மணஞ்செய்யப்பெற்ற மருமகளை அழைத்து வந்து அவளால் முதலில் பால் உலைவைக்கச் செய்வதும், கார் நெற்கதிர்களைக்கொண்டுவந்து, சிறுமியர் பலர்கூடி அவலிடிப்பதும் அழகுறப் பாடியுள்ளார். 'செல்குடி நிறுத்த பெரும்பெயர்க் கரிகால், வெல்போர்ச்சோழன் இடையாற் றன்ன, நல்லிசை வெறுக்கை' என்று கரிகாலனது இடையாற்றைச் சிறப்பித்துள்ளார். 'வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்லிசை, வளங்கெழு கோசர் விளங்கு படைநூறி, நிலங்கொள வெஃகிய பொலம்பூட் கிள்ளி' எனச் சோழன் கோசரை வென்றமை கூறுகின்றார். தூங்கலோரியார் பாடிய தழும்பனது ஊணூர் என ஊணூரைப் பாராட்டியுள்ளார். 'நெடுந்தேர் களிறொடு சுரக்குங் கொடும்பூட், பல்வேல் முசுண்டை வேம்பியன்ன வென், னல்லெழி லிளநலம்' என்று, முசுண்டையின் வண்மையையும், ஊரையும் பாராட்டிக் கூறியுள்ளார். வடுகர் தலைவன் **எருமை** யென்பானையும், குட்டுவன் சேர



லையும், அவனது தொண்டியென்னும் பட்டினத்தையும், திரையன் என்பானையும், அவனது பதியாகிய பவத்திரி

யையும் பாராட்டிப் பாடியிருப்பதுடன், பழையன்மாறன் மதுரையில் வந்தெதிர்த்த கிள்ளிவளவனை வென்றதனை யும் பாடியுள்ளார். இப்பாட்டுக்களின் சொல்விழுப்பமும் பொருள் விழுப்பமும் படித்தின்புறற்பாலன. நற்றிணை யிலும், குறுந்தொகையிலும், அகநானூற்றிலும், இவர், அகப்பொருட் பகுதியான பல திணைகளும், துறைகளும் அமைவரப் பாடியிருப்பது மதிக்கத்தக்கது.

புறநானூற்றில் மூன்று பாட்டுக்கள் இவர் பாடியன. இலவந்திப்பள்ளித் துஞ்சிய நன்மாறனைப் பாடியது ஒரு பாட்டு. சோழநாட்டுப் பிடவூர் கிழான் மகன் பெருஞ் சாத்தனைப் பாடியது ஒரு பாட்டு. பொருண்மொழிக் காஞ்சியாகப் பொதுவிற் பாடியது ஒரு பாட்டு. நன் மாறனுக்குச் சீற்றம், வலி, புகழ், எண்ணியது முடித்தல் என்பனபற்றி முறையே மணிமிடற்றிறையையும், பலரா மனையும், மாயோனையும், முருகனையும் உவமையாகக் கூறு கின்றார். இப்பாட்டில் யவனரால் குப்பியிற் கொடுவரப் பட்ட மதுக்குறிக்கப்படுகிறது. பெருஞ்சாத்தனைப் பாடிய பாடாண் பாட்டில், 'தன்மனைப், பொன்போன் மடந்தையைக் காட்டி யிவனை, யென்போற் போற்றென் றோனே' என்று, அவன் புலவர்பால் வைத்துள்ள வேற் றுமையில்லா அன்பினை விளங்கக் கூறியுள்ளார். பெருஞ் சாத்தனது ஊராகிய பிடவூர் திரிசிரபுரத்துக்குக் கீழ்பா லுள்ளது. 'உறந்தைக்குணது, நெடுங்கை வேண்மா னருங்கடிப் பிடவூர்' என, இப்பாட்டிலும் கூறப்பட் டுளது. இவர் கூறிய பொருண்மொழிக் காஞ்சி படித் தறிந்து மகிழத்தக்கது.

தென்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய வொருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலுந் துஞ்சான்
கடுமாப் பார்க்குங் கல்லா வொருவற்கும்
உண்பன நாழி யுடுப்பன விரண்டே
பிறவு மெல்லா மோரொக் கும்மே
செல்வத்துப் பயனே யீதல்
துய்ப்பே மெனினே தப்புந பலவே.' (புறம்—கஅகூ.)

---

## முடிபு.

நக்கீரர் விளங்கிய காலத்தில், தமிழறியும் பெருமாள் என்னும் பெயருள்ள ஓர் மாது புலமையிற் சிறந்தாளாய் மிக்க செருக்குற்றிருந்தனள் என்றும், அவளை மணஞ்செய்துகொள்ள விரும்பிவந்தார் பலரும் அவளெழுப்பிய வினுக்களுக்கு விடையிறுக்கமாட்டாது தோல்வியுற்று நாணிச் சென்றனரென்றும், நக்கீரர் ஓர் விறகுவிற்பானுக்குக் கல்வி கற்பித்து, அவனை அழைத்துச் சென்று, வாதினில் வெல்லுமாறு புரிந்து, அவள் அவனுக்கு வாழ்க்கைப்படுமாறு செய்வித்தனரென்றும் ஓர் விநோதமுள்ள கதை வழங்குகிறது. இதன் விரிவை, 'தமிழறியும் பெருமாள் கதை' என்று வழங்குகிற சிறு புத்தகத்திலும், புலவர் புராணம் முதலியவற்றிலும் காண்க. மற்றும் இவர் சம்பந்தமாக வழங்கும் கதைகள்

உளவேனும் கேட்டுணர்க.

இவர், தாம் பாடிய அகத்திணைப் பாட்டுக்கள் பல வற்றினும் முடியுடைவேந்தரும், சிற்றரசருமாகிய பலரு டைய பெருமைகளையும், செயல்களையும் குறித்திருப்பதி



லிருந்து சரிதவுண்மைகளை வெளிப்படுப்பதில் இவருக் குள்ள ஆர்வ மிகுதி புலப்படுகின்றது. இவ்வாறன்றிப் பரிசில் கருதி யாரொருவரையும் பாடினரென்று கொள் ளச் சிறிதும் இடனின்று. இவர் பல நிலங்களையும், காலங்களையும், அவற்றுட்பட்ட இயற்கைப் பொருள்க ளின் பண்புகளையும் உள்ளவாறு கூறுவதிலிருந்து, அவை களில் இவர் எவ்வளவு ஆழ்ந்த அறிவும் அநுபவமு முடையராயிருந்தாரென்பது புலனாகின்றது. தமிழ் நாட்டு மூவேந்தர் பெருமைகளையும், அவர்கள் நாடு நக ரங்களின் சிறப்புக்களையும் ஒப்பமதித்துப் பாராட்டுவதி லிருந்து, இவருடைய நடுவு நிலைமையும், மனத்தூய்மை யும் புலனாகின்றன. இவர் பாட்டுக்களிலிருந்து இவரு டைய குணஞ்செயங்களாக நாம் அறியலாறுவன மற்றும் பலவுள்ளன.

மேல் ஐந்ததிகாரங்களாலும் கூறியவற்றின் றொ கைப் பொருள் :

ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளின் முன் மதுரையம்

பதியிற் சிறந்த ஆசிரியராய் விளங்கிய தத்தனார் என்பவர்க்குப் புத்திரராய்த் தோன்றிய நக்கீரனார், தமிழெனு மளப்பருந் தீம்பாற்கடலையுண்டு, ஞானவொழுக்கங்களான் மேம்பட்டுச், சங்கப்புலவருட் டலைவராய்த் திகழ்ந்தனரென்பதும், திருமுருகாற்றுப்படையும், நெடுநல்வாடையும், நற்றிணை முதலிய தொகைகளிற் பல பாட்டுக்களும் இவர் பாடியன வென்பதும், அப்பாட்டுக்களின் சிறப்புக்கள் இன்னவென்பதும், இறையனா ரகப்பொருளுக்கு மெய்யுரை கண்டவர் இவரே யென்பதும், அவ்வுரையின் சிறப்புக்க ளிவையென்பதும், இவர் சிவபிரானொடும் வாது புரிந்து, தாம் கொண்ட கொள்கையே மெய்யெனச் சாதித்தனரென்பதும், கைலைபாதி காளத்திபாதித் திருவந்



தாதி முதலியன இவர் பாடிய வல்லவெனச் சிலர் கூறுதற்குக் காரணமில்லையென்பதும், அவை இவர் பாடியவாகவே யாம் கொள்ளவேண்டுமென்பதும், இவருடைய குணமும், பெருமையும் இத்தகையவென்பதும் பிறவுமாம்.

### வாழ்த்து.

மழைவளஞ் சிறக்க நாளும் மாநிலத் துயிர்க ளெல்லாம்
தழைவுறு முளத்தவாக தருமமே தலைநின் றோங்க
பழையநம் தமிழின் சீர்த்தி பரவுக வுலக மெல்லாம்

விழைவுற வரசன் செங்கோல் மேன்மையின் விளங்க
[மாதோ.

பண்டிதர் மு. வேங்கடசாமி நாட்டார்
இயற்றிய நூல்கள்.

---

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| நக்கீரர் ... | 0 | 8 | 0 |
| வேளிர் வரலாற்றின் ஆராய்ச்சி ... | 0 | 8 | 0 |

---

கபிலர் விரைவில் வெளிவரும்.

---

நூல் கிடைக்குமிடம்:—

பண்டிதர் ந. மு. வேங்கடசாமி நாட்டார்,
தமிழ்த் தலைமைப்பண்டிதர்,
எஸ். பி. ஜி. காலேஜ்,
திருச்சிராப்பள்ளி.

